

# பாரதிதாசன்

## உவமை நயம்

வல்லிக்கண்ணன்

# பாரதிதாசன் உவமைநயம்

வல்லிக்கண்ணன்



ராஜகுமாரி பப்ளிகேஷன்
10/1070, முகப்பேர் கிழக்கு,
சென்னை—600 050
தொலைபேசி—6243617

# நூல் விபரம்

நூல் தலைப்பு : பாரதிதாசன் உவமைநயம்

ஆசிரியர் : வல்லிக்கண்ணன்

மொழி : தமிழ்

பதிப்புவிபரம் : முதற்பதிப்பு 1946
இரண்டாம் பதிப்பு: டிசம்பர், 1992
மூன்றாம் பதிப்பு: ஜூலை, 1999

உரிமை : ராஜகுமாரி பப்ளிகேஷன்

தாளின் தன்மை : 11.6 கி.கி

நூல் அளவு : கிரெளன் சைஸ்

($12\frac{1}{2} \times 18$செ.மீ)

எழுத்தின் அளவு : 12 புள்ளி

பக்கங்கள் : 72

நூலின் விலை : ரூ. 15-00

வெளியீட்டாளர் : ராஜகுமாரி பப்ளிகேஷன்,
சென்னை-600050.

நூல் கட்டுமானம் : தையல்

அச்சிட்டோர் : ஜீவோதயம் அச்சகம்
சென்னை-5

# பதிப்புரை

பாவேந்தர் பாரதிதாசனின் கவிதைகளில் காணும் நயங்களைக் கூறும் நூல்கள் எத்தனையோ வந்துள்ளன. தமிழ் மறுமலர்ச்சி இயக்கம் தோற்றுவித்த முன்னணி இலக்கியவாதி நண்பர் வல்லிக்கண்ணன் அவர்களின் ''பாரதிதாசன் உவமை நயம்'' என்னும் இந்நூல், அவற்றிலெல்லாம் அற்புதமானது.

கமலா பிரசுராலயம் அமைப்பின் பதிப்புரிமை கொண்ட ''உவமை நயம்'' நூலின் மறு அச்சு இது. நூலின் உரிமையைப் பெற்ற, தமிழ் பதிப்பகத்துறை முன்னோடிகள் மூவரில் ஒருவரான திரு. முல்லை ப முத்தையா அவர்கள் மறுஅச்சு செய்து கொள்ளும் உரிமையை எமது நிறுவனத்துக்கு வழங்கியிருக்கிறார். அவரது அன்பிற்கு நன்றி

—ராஜகுமாரி பப்ளிகேஷன்

# சுட்டு விரல்

ஜன்னல் திறக்கப்படுகிறது.

சாளரத்தின் பின் நின்று அழகை விழுங்க முயல்பவ னின் பார்வையிலே படுகிறது 'விரிந்த பந்தல் பிரித்த தாமென மின்னொளிக்கும் வானம்!' விண்மீன் சோலை யிலே விழிகள்! பறக்க முயல்கின்றன.

கணக்கற்ற வெள்ளிகள்! எல்லையற்ற அழகின் மலர்ச்சி சிரிக்கும் விண்மீன்கள் பல. உள்ளத்தைத் தொடக் கண்களில் ஒளி சேர்க்கின்றன. 'இதோ! அதோ!' என்று சுட்டிக் காட்ட விரல் முந்துகிறது.

என்றாலும் அழகு முழுவதையும் எல்லை கட்டிவிட முடியாது. வியப்புகள் அத்தனையையும் வலை வீசிப் பிடித்துவிட முடியாது.

எனக்குத் தெரியும், எனது இந்த முயற்சியும் அதே கதை என்று. நான் கவிஞர் பாரதிதாசன் கவிதா மேதைக்கு எல்லை கட்டி அளந்து காட்டிவிட்டேன் என்றோ, கவிஞரின் திறமை இவ்வளவே என்றோ சொல்லவரவில்லை. அப்படி யாரும் சொல்லவும் முடியாது.

இம்முயற்சி கவிஞரின் கருத்துக்களுக்கு விரிவுரை அல்ல. நாலு வரிகளை வைத்துக்கொண்டு நாலு பக்கம் 'ஆகா அற்புதம்' என அளக்கும் வித்தை அல்ல. கவிஞரின் சொற்களுக்குப் பதவுரை பொழிப்புரை கூறும் வேலையும் அல்ல.

கவிஞரின் நூல்களைப் புரிந்து கொள்ள அகராதியைப் புரட்ட வேண்டிய அவசியம் கிடையாது. உள்ளத்தைத் தொடும் உணர்ச்சி ஓவியங்கள் அவரது கவிதைகள். தமிழர் உள்ளத்தில் கொஞ்சி விளையாடும் இன்பத் தமிழ் அவருடையது. 'பழகு தமிழ்' அவர் கையாள்வது. யாரும் ரசிக்க முடியும். ரசிக்கிறார்கள்.

வான் போன்று விரிந்த அவரது கவிதைப் பூங்காவில் மின்வெட்டுகின்றன எவ்வளவோ சிறப்புகள். கருத்திலும், நடையிலும், வர்ணனையிலும் புதுமை ஒளி. எத்தனையோ நயங்கள். அவற்றில் ஒன்றான உவமை நயத்தைச் சுட்டிக் காட்டும் முயற்சியே என்னுடையது.

நயங்களை 'இதோ, அதோ' என்றுதான் காட்ட முடியும், வானத்து வெள்ளிகளைச் சிறு சாளரம் மூலம் சுட்டுவது போல.

அழகை ரசிக்க வேண்டியது அழகுப் 'பக்தர்களின் பொறுப்பு. தான் கண்ட அழகுகளை மற்றவருக்குச் சுட்டுக் காட்டுவது அழகுப் பித்தனின் பண்பு,

கவிஞர் பாரதிதாசன் கவிதைகளில் நான் கண்ட உவமை நயத்தைச் சுட்டும் முயற்சியே இது. அவற்றைப் பற்றிய பிரசங்கம் அல்ல. அவற்றின் தொகுப்புத் தான்.

உவமை நயம் கவிஞரின் கவிதா நயத்தை, தமிழின் செல்வத்தை, அனுபவித்து ஆனந்தம் அடைய வேண்டும் என்ற ஆவலை அன்பர்கள் மனதில் எழுப்ப வேண்டும் என்பது என் ஆசை.

ஒவ்வொரு தமிழனும் பாரதிதாசன் கவிதைகளைப் படிக்கவேண்டும், கவிஞரின் பெருமையை உணர வேண்டும் என்பது என் ஆவல்.

கவிஞர் பாரதிதாசன் தமிழின்செல்வம், தமிழ் நாட்டின் பேறு. தமிழரின் துணைவர்.

**வல்லிக்கண்ணன்**

# உள்ளுறை

# உவமைக்குப் பாரதிதாசன்

தமிழ் இலக்கிய சரிதையில் கவி பாரதியுடன் புது யுகம் பிறக்கிறது. தமிழுக்கு மறுமலர்ச்சி தந்தவர் பாரதி. அவருக்குப் பிறகு மொழிக்குப் புது வனப்பும் மணமும் அளித்துத் தமிழை வள முள்ளதாக்கி வாழ்வோர் பலர்.

பாரதி பரம்பரையில் வந்த கவிஞர்களில் தலை சிறந்தவர் கவி பாரதிதாசன். கவிஞர் பாரதிதாசனின் கவிதைகளில் கவிதைக்கனல் தனி ஒளியுடன் பிரகாசிக்கிறது. அவரது கவிதைகளில் புதுமை இருக்கிறது. அழகு இருக்கிறது. இனிமை இருக்கிறது. சோர்ந்து கிடக்கும் சமுதாயத்துக்குப் புத்துயிர் ஊட்டும் உணர்ச்சி நிறைந்திருக்கிறது. புதுயுக வாழ்வுக்குத் துணைபுரியும் கருத்துக்கள் ஏராளமாக உள்ளன. இவற்றுக்கெல்லாம் மேலாக, கவிஞரின் சிருஷ்டிகளில் உவமைகள் தனி நயத்துடன் மிளிர்கின்றன.

வாழ்வின் உண்மைகளை அழகாக எடுத்துக் காட்டுவது கவிதை. கவிதைக்கு அழகும் உயிர்ப் பும் தருவன சொற்களில் இழைந்து காணும் உணர்ச்சியும் கருத்துக்களும். இவற்றுடன் சிறப்புத் தருவது கற்பனை. கற்பனையின் அழகான இசைவு உவமை. உவமைகள் கவிதைக்கு உயர்வு அளிப்பதுடன், கவிஞனின் உளப்பாங்கையும் கற்பனைப் பெருக்கையும் சுட்டிக்காட்டுகின்றன.

உவமைகளை நயம்படக் கையாள்வதில் கவி பாரதிதாசன் தனிவன்மை பெற்றிருக்கிறார். வேறு எந்தக் கவிகளிடமும் காண இயலாத உவமை நயத்தை அவரது கவிதைகளில் காணலாம். சில அம்சங்களில் கவி பாரதியை விடப் பாரதிதாசன் உயர்ந்தவர் என்பது எனது கருத்து—முக்கியமாக உவமைகளை அமைப்பதில். மற்றக் கவிகளின் எழுத்திலே இல்லாத வேகமும் உறுதியும் பாரதிதாசன் கவிதைகளில் மின்னுவதுபோல, தமிழுக்கே புதுமையான அருமையான உவமைகள் சுடர் தெறிக்கின்றன, கவிஞரின் தனித்திறமையை ஒளியுறுத்தியவண்ணம். அவ்வளவும் தமிழ் மணம் நிறைந்தவை. 'கங்கையைப் போல் காவிரிபோல் கருத்துக்கள் ஊறும்' தமிழ் உள்ளத்தின் வளத்தைக் கூறும் மாணிக்கங்கள் அவை.

முன்பு செழிப்புற்றிருந்த தமிழ் இடைக்காலத்தில் தேக்கம் பெற்றது. இலக்கியத்தில் பழமைக் கருத்துக்களும், பழைய போக்குமே நெளிந்தன. கவிதை என்றால் பணக்காரர்களின் லீலா விநோதங்களை வர்ணிப்பது, ஸ்தல புராணம் பாடுவது என்ற நிலை ஏற்பட்டதைப் போலவே. சிந்தனைச் சோம்பலும் பாசியாய் படர்ந்தது. அதனால் என்ன ஆயிற்று? தமிழ்க் காவிய உலகம் ஒரே தாமரைக் காடாக மாறிவிட்டது.

கவிதையில் உவமை வேண்டுமானால், தாமரைதான் தலை காட்டியது. முகம் தாமரை, கண் தாமரை வாய் குமுதம், கை அரவிந்தம், தாளும் அஃதே! மதிவதனமும், பிறை நெற்றியும்

பெருகியதுபோல அன்னம்போல் மென்னடையும் முத்துப் பல்லும் தண்ணீர் பட்டபாடு பட்டன. பெண்களை வர்ணிக்கத்தான் உவமை அதிகம் பயன்பட்டதே தவிர, வேறு எதற்கும் அவ்வள வாகத் தலைகாட்டவில்லை.

தமிழ் மறுமலர்ச்சி பெறத் தொடங்கியதும் கருத்திலும் சொல்லிலும் புதுமையும் புரட்சியும் வளர்ந்தன. அவ்விதம் கவிதையின் இனிமையும், கருத்துச் செறிவும் சிந்தனைப்புரட்சியும், உவமை யில் புதுமையும் கலந்து தமிழுக்கு அழகு ஊட்டும் கவிஞர் பாரதிதாசன் ஒருவர்தான். புதுமைக்கு உயிரூற்றான கவிஞரின் நூல்களில் புதுமையான உவமைகள் மலிந்து கிடப்பதில் வியப்பில்லை. வாழ்வின் உண்மைகள் பலவற்றையும் அழகான உவமைகளுடன் கூறுகிறார் அவர்.

மங்கையர்வனப்பு; காதல் இன்பம், இயற்கை எழில், உழைப்போர் தன்மை, அறிஞர் பண்பு, தமிழின் சிறப்பு—எதுவானாலும் சரி, எதைப்பற்றி வேண்டுமானாலும் சரி, அழகிய புதுமையான உவமைகள் காண, கவிஞர் பாரதிதாசன் நூல் களைப் படித்தால் போதும்.

அவரது கவிதைத்தொகுப்பு, 'குடும்ப விளக்கு' 'அழகின் சிரிப்பு' 'இசை யமுது' 'எதிர்பாராத முத்தம்' 'இருண்ட வீடு' 'பாண்டியன் பரிசு' முதலிய எல்லா நூல்களிலும் எண்ணற்ற நயங் கள் மலர்ந்து ரசிக உள்ளத்துக்குச் சுவை அளிப்பது போல, உவமை நயமும் களிப்பூட்டு கிறது. ஆராய ஆராய இனிப்பன அவை.

# மங்கை எழில்

அன்றாட வாழ்க்கையில் நாம் காணும், கேட்கும் விஷயங்களுக்கும் கவிதைக்கும் சம்பந்தம் இருக்கக் கூடாது என்று எண்ணியதாலோ என்னவோ, கவிதை என்றால் அளவுக்கு மீறி அளத்தல் என்று விரித்துரைக்கும்படி வளர்ந்து விட்டது அது. சாதாரண வாசகனும் புரிந்து அனுபவிக்கிற முறையில் விஷயங்களை விளக்காமல், தெரியாதவற்றைக் கூறி குழம்பச் செய்வதே கவிதையின் லட்சணம் என முன்னுள்ளோர் முடிவு கட்டிவிட்டார்கள். அத்துடன் அமானுஷிகமெருகும் பூசமுயன்றதனால் கவிதை, வாழ்வின் எல்லையை விட்டுத் தூரப்போய் விட்டது.

அதன் பயனாக, அழகிகளைப் பற்றிய உவமைகள் கூட 'நீராமின்னாளோ, நிச நாகக் கன்னிகையோ! சூராமின்னாளோ!' என்றும் 'காமனும் கண்டுகாமுறும் கன்னி' 'திருவும் வெட்குறும் அழகு' 'ரதியைப் பழிக்கும் ரூபம்' என்றுமே எழுத நேர்ந்தது. இவ்விதக் காவியங்களைக் கரைத்துக்குடித்தவர்கள் தமிழ் எழுதவந்தவுடனே பழைய வாசனைதான் அடித்தது. வழவழா என்று வர்ணித்துவிட்டு 'அவள் அழகை ஆயிரம் நாபடைத்த ஆதிசேஷனும் வர்ணிக்க முடியாது என்றால் நாம் எப்படி எழுத இயலும்!' என்று முற்றுப் புள்ளி வைப்பவர்கள் பலர்.

மூளையைச் செலவு செய்யப் பயந்தவர்கள் முந்திய கவிகள் வகுத்த உவமை இலக்கணத்தை அப்படியே பின்பற்றத் தயங்கவில்லை. அதன் காரணமாக தாமரையும் முத்தும், முல்லையும் எள்ளுப்பூவும், வள்ளையும் செங்காந்தளும் போனால் உவமைக்கு வேறு பொருளே இல்லை என்று எண்ணும்படியாயிற்று. இவ்விதக் காவியங்களையே படித்து அலுத்துப்போன உள்ளத்திற்கு அருமையான மாற்றுக்கிடைத்தது. அதுதான் பாரதிதாசன் கவிதை.

பாரதிதாசன் மங்கையை 'நீராமின்னாளோ' என்று வியக்கவில்லை. ரம்பை, ஊர்வசி என்று உவமிக்கவில்லை. பூலோகத்துப் பெண்களுக்கு உவமையாக சர்வ சாதாரண பூலோக விஷயங்களைத்தான் கூறுகிறார். அவை எவ்வளவு புதுமையாக, அழகாக அமைகின்றன!

'சிப்பம் பிரித்தெடுத்த சீனத்துப் பொம்மை' 'கலைக்காத சாத்துப்படிச் சிலையைப்போல்' 'படிகத்தும் பதுமை போன்றாள்' என்பன போன்ற சொற்கள் பிரமிக்க வைக்கின்றன.

அழகியின் பல்லுக்கு உவமை கூற நமது கவிஞர்களுக்கு அகப்பட்டவை இரண்டே இரண்டுதான், அந்த முத்தும் முல்லையும் என்ன பாவம் செய்தனவோ — அல்லது புண்ணியந் தானோ—மெல்லியலாரின் பல் முன்னிலையிலே வெட்கித் தலை குனிந்து கொண்டே இருக்கின்றன கவிதையில்தான். இதன் காரணம் சோம்

பலோ, சிந்தனைத் தேக்கமோ, என்னவோ! ஆனால் பாரதிதாசன் இதோ சில உவமைகளைக் காட்டுகிறார், 'ஆகா' என வியந்து போகும் படியாக.

'தென்னம்பாளை பிளந்து சிந்திடும் சிரிப்புக்காரி'
'மயிலிறகின் அடியைப்போல் பல்லிலெல்லாம் ஒளி யிருக்கும்'

இந்தப் போக்கில் பெண்ணின் எழிலைக் கூறும் புதிய உவமைகள் ஆங்காங்கே மலர்கின்றன.

'வெண் முத்தில் நீலம் விளையாடிக் கொண்டி ருக்கும் கண்கள்'
'அன்னத்தின் தூவி அனிச்ச மலரெடுத்துச் சின்ன உடலாகச் சித்திரித்த மெல்லியள்'
'வதங்கவிலாச் சண்பகத்து நல்லரும்பு சாடை புரிகின்ற விரல்'

'கன்னம் ஈரச் சந்தனத்துப் பலகை போல் குளிர்ந்திருக்கும்' 'பழச்சுளையின் வாய்' 'கண்ணாடிக் கன்னம்' வடிவத்தின் ஆதிக்கம்' 'அச்சடித்த பதுமை' 'கூவத் தெரியாக் குயிலின் குஞ்சு' 'தாவாச் சிறுமான்' 'மோவா அரும்பு'

இவ்விதம் அழகிய உருவங்களாக உவமைகளை எழுப்பும் கவிஞர் பழம் எடுத்துக்காட்டு களைக் கையாளும்போதுகூட அவற்றில் தனி நயம் புகுத்தி விடுகிறார் திறமையாக.

'மின்னற் குலத்தில் விளைந்ததோ?—வான்
வில்லின் குலத்திற் பிறந்ததோ?
கன்னற் றமிழ்க்கவி வாணரின்—உளக்
கற்பனையே உருப் பெற்றதோ?
பொன்னின் உருக்கிற் பொலிந்ததோ?—ஒரு
பூங்கொடியோ? மலர்க் கூட்டமோ?

'தண்ணிலவும் அவள் முகமோ!
தாரகைகள் நகையோ!
தளிருடலைத் தொடும் உணர்வோ
நன் மணஞ்சேர் குளிரும்
விண்ணீலம் கார் குழலோ!
'காணும் எழிலெல்லாம்
மெல்லியின் வாய்க்கள் வெறியோ!
அல்லி மலர்த் தேன்
வண்டின் ஒலி அன்னவளின்
தண்டமிழ்த்தாய் மொழியோ!'

என்று அடுக்கிச் சென்று "கண்டெழுத முடியாத நறுங்கவிதை அவளே" என முடிக்கும்போது ரசிக்காமலிருக்க முடியாது.

பெண்ணின் வதனம் சந்திரன், அவள் சந்திரிகை என்பதெல்லாம் நாம் அடிக்கடி கேட்பவை. அவள் கூந்தல் கருமேகம் என்பதும் தெரியும்.

மேகத்திரை நீக்கித் தலைகாட்டும் அம்புலியை எல்லோரும்தான் பார்க்கிறோம். குளித்துக் கரையேறும் அணங்கும் நம் பார்வையில் படுகிறவள் தான். சர்வ சாதாரணக் காட்சி. ஆனால்,

'முகிலைக் கிழித்து வெளிக் கிளம்பும்—ஒரு
முழுமதிபோல நனைந்திருக்கும்—தன்
துகிலினைப் பற்றித் துறைக்கு வந்தாள்

என்று கவிஞர் சுட்டிக்காட்டும் பொழுது அதில் நாம் புதுமையைக் காண்கிறோம்.

அழகினுக்கே ஓர் அழகாய் வந்த மங்கை அணிந்ததனால் ஆபரணங்களும் அழகுற்றன என அதிசயிக்கும் தமிழ்க் கவிப் பண்பிலே, கவிஞர் ஓர் புதுமையைக் காட்டியிருக்கிறார்.

அதற்கு அவர் காட்டும் உவமை 'என்ன! என்ன! என்று வாசகனையும் வியப்பில் ஆழ்த்தி விடுகிறது.

'பொழி கதிரை மறைத் தொளிகொள் முகிலைப் போல
புனை ஆடை பொன்னொளியைப் பெற்ற தென்றால்
அழகுடையாள் திருமேனி என்ன! என்ன!'

தாமரை இதழ் உவமை கூட ஓர் புதுமை பெறுகிறது அவரிடம். காதலனை வருக என்று அழைக்கிறது கன்னியின் கை' எப்படி?

'ஒரு செந்தாமரை இதழ் தான்
தென்றலால் உதறல் போல
வருக என்றழைத்த கை'

அன்னை தன் குழந்தைக்குத் தாலாட்டு கிறாள். அதில் எத்தனை இனியஉவமைகள் சிரிக் கின்றன! பழமை புதுமெருகு ஏற்று மின்னுவதைக் காண்கிறோம்.

'சீரோடு பூத்திருந்த செந்தாமரை மீது
நேரோடி மொய்த்துலவு நீலமணி வண்டுதனைச்
செவ்விதழால் தான்மூடும் சேதிபோல் உன்விழியை
அவ் இமையால் மூடியே அன்புடையாய் நீ யுறங்கு!
கன்னங் கறேலென்று காடுபட்ட மேகத்தில்
மின்னி வெளிப்பட்ட விண்மீன்போல் உன்றன் விழி
சின்ன இமையைத் திறந்ததேன்? நீ யுறங்கு'

மங்கையின் வதனம் மதிதான். மதியைக் கண்டஅல்லி மலர்வது இயல்பு. நமது இலக்கியத் தில் இதற்குக் குறைவே கிடையாது. இந்தக் காட்

சியை இப்பொழுதும் நன்கு பருகும்படி அழகாக விருந்தளிக்கிறார் பாரதிதாசன். தூங்காமல் தாயின் முகம் நோக்கிச் சிரிக்கும் குழந்தையிடம் அவள் சொல்கிறாள் :

'அன்னைமுகம் வெண்ணிலவே ஆனாலும் உன்
விழியைச்
சின்னதொரு செவ்வல்லி ஆக்காமல் நீ யுறங்கு

ஒரு பெண் அழுகிறாள். அவள் கண்ணீர் வடிப்பதைக் கூறும் கவி 'முத்து முத்தாகக் கண்ணீர் சிந்தினாள்' 'மாலை மாலையாகக் கண்கள் நீரை உகுத்தன' 'வெள்ளம் போல் புரண்டது கண்ணீர்' என்ற தன்மையில் எழுது வதுதான் வழக்கம். புரட்சிக் கவிஞரோ

'படிகத்தைப் பாலாபிஷேகம் செய்து
பார்ப்பது போல் அமுதவல்லி கண்ணீர் வெள்ளம்
அடிசோர்தல் கண்டார்கள் அங்கிருந்தோர்

என்று காட்டும்போது நாம் புரட்சியையே காண் கிறோம்.

# ஆணழகு

மங்கையர் வர்ணனையில் புதுமையான உவமைகளைச் சிருஷ்டித்த புரட்சிக் கவிஞர் ஆணழகனைக் கூறும் கட்டத்திலும் புதிய, சுவையான உவமைகளை ஆக்கியிருக்கிறார். பழமையும் புதுமையும் இழைந்து மின்னும் ஒரு பகுதி இதோ:

மீதுயர்ந்த இரு தோள்கள் ஒளியை வாரி
வீசுகின்ற குன்றங்கள்! மறவன் தூக்கி
ஊதுகின்ற வளைகொம்பின் புருவத்தின்மேல்
உயர் நெற்றி அஞ்சாமை முழங்கும் கூடம்!
மோதுகின்ற இளங்களிறு போல் நடந்து
முன்வாயிற் புன்னகையை விளைப்பான்!
கிளிக்கழுத்தின் பொன்வரிபோல் அரும்பும் மீசை
கீழ்க்கடலின் மாலைவெயில் கலந்த நீல
ஒளித்திரை போல் தலைமயிர் சிங்கத்தின் தோற்றம்
உயர்ப்பரிதி வான்போன்ற மேனி வாய்ந்தான்!
துளித்த நறுந்தேனென்று சொல்லும் சொல்லைத்
தொடங்கு குரல் முழங்குகின்ற கடலே!

இன்னும் ஒரு புதுமை:

நெடிதுயர்ந்த குன்றமும், ஓங்கிய மலையும் வீர இளைஞனுக்கு உவமைகள்தாம். அவை தவிர வேறு வேண்டுமானால் நமது புதுமைக்கவி கூறுகிறார், கேளுங்கள்.

அடி பிடித்த வேர் கல்லி நூல் பிடித்து
வாள் பிடித்தறுத்தெடுத்த செம்மரத்தில்
வான்பிடிக்கச் செப்பனிட்ட தேர் போன்றான்!

# காதல்

அழகனும் அழகியும் சந்திக்கிறார்கள். கண்களைக் கண்கள் கவ்வ, இடையே காதல் பிறக்கிறது. அதுதான் உயிர்களின் இன்பமாய் அமைவது போல, கவிதைக்கும் காவியத்திற்கும் கலைகளுக்கும் உயிர் நாடியாகத் திகழ்கிறது.

காதலையும், காதலர் இன்பத்தையும், பிரிவையும் வேதனையையும், பொதுவாகக் காதலர் உள்ளப் பண்பையும் வாழ்வையும் பற்றிக் கூறாத இலக்கியம் இல்லை; கலை இல்லை. எவ்வளவோ காலமாகக் கையாளப்பட்டு வரும் இந்த தத்துவத்தை இன்னும் எத்தனையோ காலத்திற்குப் பிறகும் கூட ரசித்தும் பாடியும் போற்றியும் மகிழத்தான் போகிறார்கள் கவிகளும் கலைஞர்களும்.

இந்தக் காதல் தத்துவத்தைக் 'கன்னா பின்னா' என்று, கேட்டு கேட்டுப் புளித்துப் போன தன்மையிலேயே, புதுமையின்றி எல்லோரும் எழுதப் போகவேதான் படிப்பவர்களுக்குச் சலிப்பு விளைகிறது. ஆனால் திறமையின் மெருகு பட்டால் அது அளவற்ற இன்பம் தருகிறது. தொட்ட சொற்களில் எல்லாம் தங்கத்தைத் தேக்கும் வன்மை பெற்ற கவிஞர் பாரதிதாசன் கவிதைகளில் காதலைப் பற்றிக் கூறுபவை அத்

தனையும் சொக்கத் தங்கம். அவற்றில் ஒளிரும் உவமைகளோ புதுமையின் மணிகள்.

காதலனும் காதலியும் ஒன்றுபட்டதை உவமிக்க எண்ணுகிறவர்களுக்கு 'ஒருயிரும் ஈருடலும்' 'பூவும் நாரும்' 'மலரும் மணமும்' போன்ற சில சொற்றொடர்கள்தான் அகப்படும். ஆனால் புரட்சிக் கவிஞரின் வரிகளில் புதுமையைக் காணலாம்.

'கொல்லர் காய்ச்சும் இரும்பிடை நீர்த்துளி ஆகக்
கலந்திடும் இன்பம்
'வெள்ளத்தினோடொரு வெள்ளமு மாய்நல்ல வீணை
யும் நாதமும் ஆகி விட்டார்.'

இப்படிக் 'கண்களும் ஒளியும் போலக் கவின் மலர் வாசம் போல'க் கூடுகின்ற அவனும் அவளும் எங்கிருந்தால்தான் என்ன? சங்கமம் ஏற்படுவது இயற்கை. எப்படி என்றாலோ?

'திங்கள் ஒருபுறமும்—மற்றைச்
செங்கதிர் ஓர் புறமும்
தங்கி யிருந்திடினும்—ஒளி
தாவுதல் தீண்டது போல்,
அங்கம் பிரிந்திருந்தும்
சங்கமம் ஆவதுண்டாம்—காதற்
சமுத்திர விழிகள்!
'பழகும் இருட்டினில் நானிருந்தேன் எதிர்
பால் நிலவாயிரம் போல்—அவள்
அழகு வெளிச்சம் அடித்த தென்மேல்

என்பது 'அவள் கொள்ளை வனப்பினில் காலிடறி விழுந்த' காதலன் வாக்கு!

விழிச் சமுத்திரங்கள் சங்கமமாகிவிட்டன. இதயங்கள் ஒன்றின. ஆசை இருக்கிறது. என்றாலும் இன்பம் அனுபவிக்க முடியவில்லை. காதலர் உள்ளம் ஏங்கத்தானே செய்யும். எவ்விதம் இருக்கும் அந்த நிலை?

அறுசுவை அன்னம் எதிரே இருக்கிறது. ஆனால் அதைச் சாப்பிடக் கூடாது என்று தடை குறுக்கே விழுகிறது. பசியுடனுள்ளவன் எப்படித் துடிப்பான். அதே போன்ற தவிப்புத்தான் காதலருடையதும்.

'உண்ணும் அமுதிருந்தும்—எதிர்
உண்ண முடிவதில்லை.
தண்டமிழ்ப் பாட்டிருந்தும்—செவி
சாய்ந்திடக் கூடவில்லை'

ஆசையுடன் நெருங்குகிற அன்பனைக் காதலியே விலக்குகின்ற இடத்திலே வந்து விழும் உவமைகளும் கவனிக்கத் தக்கவை.

'கண்ணுக்குள் பாவையே!
கட்டமுதை நான் பசியோடு
உண்ணப்போம் போது நீ
ஓர் தட்டுத் தட்டி விட்டாய்!
தாழச்சுடு வெய்யில் தாளாமல்
நான் குளிர்ந்த
நிழலைத் தாவும் போது
நில் என்று நீ தடுத்தாய்!'

காதலனைச் சந்தித்து இன்பம்பெற முடியாத காதலிக்கு வாழ்க்கையே கசந்து விடுகிறது.

அவன் நினைவாகவே இருக்கிறாள். விரக வேதனை அவளைச் சுடுகிறது.

'காய்ச்சிய இரும்பாயிற்றுக்
காதலால் தேகம்'

என்பது கவிஞர் காதலியின் நிலைக்குக் கூறுகிற உவமை. அவளுக்கு உறக்கம் கொள்ளவில்லை. துயருகிறாள். அந்த நிலைமையை உவமைகள் அழகாகச் சித்திரிக்கின்றன.

'கள்ளியும் பாளை போல் கண்ணீர் விட்டுக்
கடல் நீரில் சுறாப்போலப் படுக்கை தன்னில்
துள்ளிஉடல் துவள் தலின்றி.

கிடக்கிறாள். அவள் உயிர் பிரிந்துவிடுவது உறுதியாம். உண்மை அது. ஏன்?

பூ பழசானால் உதிர்கிறது. செடியில் அமர்ந்த சிட்டு எழுந்தோடி விடுகிறது. சுளியும் அப்படியே அன்பனை அகன்ற அவள் உயிருக்கும் அதே கதிதானாம். இதோ கவிதை—

செழுங்கிளையில் பழம் பூப்போல்
புதரில் குந்தும்
சிட்டுப்போல் தென்னையிலே ஊசலாடி
எழுந்தோடும் கிள்ளைபோல் எனதுடம்பில்
இனிய உயிர் ஒரு கணத்தில் பிரிதல் உண்மை'

இது காதலியின் கூற்று.

தனியாய் நின்று தவிக்கும் காதலன் என்ன நினைக்கிறான்? அதற்கும் அழகிய உவமை உண்டு.

'கொல்லை தன்னில்
பூம்பாகற் கொடிதனது சுருட்கையூன்றி
உறைகூரை மேற்படர்ந்து சென்றிட்டாலும்
ஒரு தொடர்பும் கூரையிடம் கொள்ளாமைபோல்
பிறரிருக்கும் உலகத்தில் என்னையே தன்
பெறற்கரிய பேறென்று நெஞ்சிற் கொள்வாள்'

அவள் தன் அத்தானுக்குக் கடிதம் எழுதுகிறாள். 'குளிர்புனல் ஓடையே' என்று அன்பாய் அழைக்கிறாள். 'காதலால் காயும் கன்னி, பழத் தோட்டம் அங்கே; பசிகாரி இவ்விடம்' என்று பிரிவின் துயரை விளக்குகிறாள்.

அன்பன் காதலியின் கடிதத்தைக் கண்களால் வாசிக்கவில்லையாம். பின்? அவசரத்தையும் துடிப்பையும் விளக்கும் கவிதை சொல்வதைக் கவனியுங்கள்.

'தணலிலே நின்றிருப்போர்
தண்ணீரில் தாவுதல் போல்
எழுத்தினை விழிகள் தாவ
இதயத்தால் வாசிக்கின்றான்'

காதலிக்கு வீட்டிலே கட்டுப்பாடு அதிகம். அவளை எல்லோரும் துன்புறுத்துகிறார்கள். அந் நிலையில் காதலால் ஏங்கும் மங்கை சொல்லும் உவமை இதயத்தைத் தொடுகிறது.

'ஈ முடித்த தேன் கூட்டை வடித்தல் போலே
எனை வருத்தாதீர்' 'ஆலையிட்ட கரும்பாக்கி'

காதலிக்காக அன்பன் பெரிய காரியங்களையும் எளிதில் செய்து முடிக்கத் தயாராக இருக்கிறான் ஏன்?

கிட்டரிய காதற்கிழத்தி இடும் வேலை
விட்டெறிந்த கல்லைப்போலே மேலேறிப்
பாயாதோ?

காதல் வன்மை மிக்கது. அதை கட்டுப்பாடு தியத்துவிட முடியாது. கட்டுப்பாடு எந்த உணர்ச்சியைத்தான் அடக்கிவிட முடியும்? 'புரட்சிக் கவி'யில் வரும் காதலன் கேட்கிறான்.

காரிருளால் சூரியன் தான் மறைவதுண்டோ?
கறைச் சேற்றால் தாமரையின் வாசம்போமோ?
பேரெதிர்ப்பால் உண்மைதான் இன்மையாமோ?
பிறர் சூழ்ச்சி செந்தமிழை அழிப்ப துண்டோ?
நேர் இருத்தித் தீர்ப்புரைத்துச் சிறையில் போட்டால்
நிறை தொழிலாளர்களுணர்வு மறைந்துபோமோ?

போகாது. காதலும் அப்படித்தான்.

# முத்தம்

காதலரின் இன்ப முத்திரைகளான முத்தங்கள் புரட்சிக் கவிஞரின் கவிதையில் புதுமை நயம் பெற்றுள்ளன. அவ்வளவும் உவமையின் முத்திரைகள்.

காதலியின் இதழ் இன்ப நிலமாகிறது. அன்பன் முத்தம் பயிரிட்டுப் பலனடைகிறானாம்! எப்படி?

'இதழ் நிலத்தில் கன உதட்டை
ஊன்றினான், விதைத்தான் முத்தம்'

கிழங்கு பறித்தெடுப்பது போல ஆழப் பறித்தான் முத்தம். எவ்விதம்?

'மாரோடணைத்து மணற்கிழங்காய்க் கன்னத்தில்
வேரோடு பறித்தான் முத்தம்'

இவ்வளவுதானா! இல்லை. முத்தம் சுவைத்தல் காவிய ஆராய்ச்சி போல நடைபெறுகிறது. அவள் கன்னம் தமிழ்ச்சுவடி. அதில் ஊறும் கவிதையை அவன் ரசிக்கிறான். அதைச் சுவையுடன் காட்டும் ரசமான கவிதை இதோ—

தாமரைபோய்ச் சந்தனத்தில்
புதைந்ததைப் போல்
தமிழ்ச் சுவடிக் கன்னத்தில்
இதழ் உணர்வை
நேமமுறச் செலுத்தி
நறுங் கவிச்சுவைகள்
நெடு மூச்சுக் கொண்டமட்டும்
உறுஞ்சி நின்று

...... ...... ...... ......

'இச்'சென்று முடித்தான் முத்தம்!'

ஒரு சிறு நாடகம். முத்தம் அதன் முடிவு.

அவள் 'குடும்ப விளக்கு.' அத்தான் உண்டு களித்ததும் அம்மங்கை நல்லாள் வெற்றிலைச் சுருள் மடித்து நீட்டுகிறாள் அவன் முன்னே. ஆனால் அவள் மனமோ அதை அவன் மலர் வாயில் தரத் தவிக்கிறது கை முந்தி விட்டது! அவன் கேட்கிறான் 'சுருளுக்கு என்ன விலை? என்று.

'பொருளுக்குத் தக்கதே போதும்' என்றாள் காரிகை. 'கையில் கொடுப்பதைக் காட்டிலும் வாயில் தந்திடு மங்கையே' எனக் கொஞ்சினான் ஆளன். அவள் துடித்ததும் அதற்குத்தானே! பின் தயங்கவா போகிறாள்! மகிழ்வுடன் செங்கை உயர்த்தினாள். 'மின் வீச்சு' முத்தம் விழுந்தது கையில்.

அது எதற்கு விலை? அதன் மதிப்பென்ன? கவிஞரே கூறட்டும்:

'சேயிழை அன்பாய்ச் செங்கை நீட்டினாள்
குடித்தனப் பயனைக் கூட்டி எடுத்து
வடித்த சுவையினை வஞ்சிக் களித்தல்போல்
தளிர்க்கைக்கு முத்தம் தந்து
குளிர்வாய் வெற்றிலை குழைய ஏகினனே!'

# பெண்மை

ஓடிவரும் குழந்தையை ஆசையுடன் அள்ளி அணைத்திட முந்துவது தாய்மைப் பண்பு. தாய்மை பெண்மையின் லட்சியம். மட்டற்ற இன்பம் அளிப்பது.

ஒரு தாய், 'குடும்ப விளக்கு.' பள்ளிவிட்ட மாணவர்கள் துள்ளி வருவதைக் கண்டாள். மக்களை வரவேற்க விரைகிறாள். எப்படி? கவிஞர் பாரதிதாசன் அந்தக் காட்சியை அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறார். குழந்தைகளின் உள்ளத் துள்ளலும், அன்னையின் ஆசைத்துடிப்பும் இனிய உவமைகளில் ஒளிவிடுகின்றன.

'குழந்தைகள் பள்ளி விட்டு
வந்தார்கள்; குருவிக் கூட்டம்
இழந்த நல்லுரிமை தன்னை
எய்தியே மகிழ்வதைப் போல்!
வழிந்தோடும் புது வெள்ளத்தை
வரவேற்கும் உழவரைப் போல்
எழுந்தோடி மக்கள் தம்மை
ஏந்தினாள் 'இரு கையாலும்'

மண்ணையும் தண்ணீரையும் உழைப்பையும் நம்பி வாழும் உழவன் புதுப்பெருக்கை வரவேற்கும் ஆசை அன்னையின் ஆவலுக்கு ஒப்பிடப்பட்டிருப்பது அருமையாக உள்ளது. உழவன் பயிரிடும் பருவத்து, நீர் நிலையை ஆசைக் கண்

களால் நோக்குவது இயல்பு. அதுவேறு இடத்தில் அழகாகக் கையாளப்படுகிறது, காதலி பருகும் பார்வைக்கு ஒப்பாக.

'மடுப்புனலைப் புன்செய் உழவன் பார்த்தல்போல்
மங்கை எனை நோக்குகிறாள்'

காதலன் கூற்றாக, கவிஞர் அமைத்துள்ள இவ்வுவமை புதுமையாய், இனிமையாய் விளங்க வில்லையா?

இவ்விதம் காதலில் களிப்புறுவதும், குடும்ப வாழ்வில் இனிமை கண்டு, தாய்மையில் பெண்ணின் பெருமையை எய்துவதும் மங்கையின் வாழ்க்கை நலம் இவற்றைக் கண்டு கவி உள்ளம் ஆனந்திப்பதும் இயல்பு.

இதே வேளையில், வாழ்க்கையை அனுபவிக்க முடியாமல் எண்ணற்ற மெல்லியலார் வதங்குவதை யார்தான் சகிக்க முடியும்? அழகு மலர்கள் அவ்விதம் கருக வேண்டும் எனக் குள்ள நரிச் சமூகம் விதிப்பது என்றால் அச்சமுதாயத்தின் மீது சீற்றம் கொள்வது இயல்பு தானே? மனிதர்கள் மனிதராக வாழவேண்டும். அதற்குரிய வகை காண்போம் என வாழும் சிந்தனையாளர்கள் மணமிழந்த மங்கையர் நிலைகண்டு ஏங்காமல் இருக்க முடியுமா?

கவிஞர் பாரதிதாசன் புதுயுகச் சிற்பி. கவிதை ஒளிகாட்டிப் புதுவாழ்வுக்கு வழிகாட்ட வந்த புரட்சியாளர். அவர் கைமைப் பழியைக் கண்

டிக்கும் தன்மை, சுட்டிக் காட்டும் உண்மைகள் உள்ளம் உருக்குவன.

'சுவைத்தறியாச் சுவைதரும் கனிவாய்' மங்கை 'இளமை ததும்ப, எழிலும் ததும்பக் காதல் ததும்பக் கண்ணீர் ததும்பி ஏங்கிக் கிடக்கும் நிலை எத்தகையது? அதைக் கவிஞர் விளக்குகிறார்—

'கோரிக்கை அற்றுக் கிடக்குதண்ணே இங்கு
வேரிற் பழுத்த பலா—மிகக்
கொடிய தென்றெண்ணிடப் பட்டதண்ணே குளிர்
வடிகின்ற வட்ட நிலா!

மிகச் சுவையுடைய தீங்கனி கவனிக்கப்படாமல் ஒதுக்கப்பட்டுள்ளது. நிலா அமுதம். இன்ப விளக்கு. எழிலின் களஞ்சியம். காதலின் தூது. அதை மிக்க கொடியது என்று தள்ளுவதுபோல் இருக்கிறது, பெண்ணை விதவை என மூலையில் முடங்கிடச் செய்வது.

அவர்கள் இகழ்வது எதை? வெறுத்து ஒதுக்குவது, எதைத் தள்ளுவது போலிருக்கிறது? விஷமென அஞ்சுவது எதைக் கண்டு?

'சீரற்றிருக்குதையோ குளிர் தென்றல்
சிறந்திடும் பூஞ் சோலை—சீ
சீ என்றிகழ்ந்திடப் பட்ட தண்ணே நறுஞ்
சீதளப்பூ மாலை'
நாடப்படா தென்று நீக்கி வைத்தார்கள்
நலஞ்செய் நறுங் கனியைக்—கெட்ட
நஞ்சென்று சொல்லிவைத் தார்எழில் வீணை
நரம்பு தரும் தொனியை

சூடப் படாதென்று சொல்லிவைத் தார்தலை
சூடத்தகும் கிரீடத்தை—நாம்
தொடவும் தகாதென்று சொன்னார் நறுந்தேன்
துவைந்திடும் பொற் குடத்தை!

இவ்விதம் உவமைகளாகவே அடுக்கிவந்து முடிவு கட்டும் போது, இவ்உருக்கம் நிறைந்த சொற்கள் மனித தன்மை உள்ள மனதைத் தொடாமலா போகும்!

இத்தகைய கட்டுப்பாடு வளர்க்கும் சமூகத்தை நோக்கி ஆவேசமாகக் கவிஞர் கருத்துக்களை உதிர்க்கும் இடங்களில் உணர்ச்சியும் உவமைகளும் பொங்கித் துள்ளுகின்றன.

"ஆடவரின் காதலுக்கும் பெண்கள் கூட்டம்
அடைகின்ற காதலுக்கும் மாற்றமுண்டோ?
பேடகன்ற அன்றிலைப் போல மனைவி செத்தால்
பெருங்கிழவன் காதல் செயப் பெண் கேட்கின்றான்!
வாடாத பூப்போன்ற மங்கை நல்லாள்
மணவாளன் இறந்தால் பின் மணத்தல் தீதோ?
பாடாத தேனீக்கள் உலவாத் தென்றல்
பசியாத நல்வயிறு, பார்த்ததுண்டோ!

ரீங்காரமிட்டுத் திரியும் தேனீ போல, கிளுகிளுத்து ஊர்கின்ற தென்றல்போல, பசிக்கும் நல் வயிறுபோல, காதலின்பம் நுகர்வதும் ஆண் பெண் இயற்கை. ஆணுக்கும் பெண்ணுக்கும் பொது இயல்பான இதில் மகளிர் உரிமையை மட்டும் பறிப்பதென்றால்? அதற்குப் பெற்றோர்களே துணை என்றால் அவர்களது கடின சித்தம் தான் என்ன!

'புற்றரவு ஒத்தது தாயருள்ளம்'என்று கவிஞர் பழிப்பதில் குறையே கிடையாது. 'கோழியும் தன் குஞ்சுகளைக் கொல்ல வரும் வான் பருந்தைச் சூழ்ந்தெதிர்க்க அஞ்சாத இத்தொல்புவியில்' 'கெண்டை விழிகள் மூடாக் கிளிமகள் காதலும் தானும் கனலும் புழுவுமாய் ஓங்கிட, வகை செய்யும் தாய்களும் இருக்கின்றார்கள். கருகும் உள்ளங்கள் 'மண்ணாய்ப் போக, மண்ணாய்ப்போக! மனம் பொருந்தா மணம் மண்ணாய்ப்போக! சமூகச் சட்டமே, சமூக வழக்கமே! நீங்கள், மக்கள் அனைவரும் ஏங்காதிருக்க மண்ணாய்ப் போகவே!' என்று சபிக்கத்தான் செய்யும்!

# நிலா வர்ணனை

பாரதிதாசனின் கவிதா மேதையை எடுத்துக் காட்டும் ஒரே பகுதி மட்டும் கூறுக என்று கேட்டால், தயக்கமின்றி நான் சுட்டக் கூடியது நிலா வர்ணனையேயாகும். 'புரட்சிக்கவி' நிலவைக் கண்டு களிப்பூறப் பாடுகின்ற வர்ணனை, அற்புதமான, தமிழின் வளத்தை வளப்படுத்தும், மணிக்கவிதை. அது உவமைகள் துள்ளிப்பாயும் உணர்வின் ஊற்று.

'விண்ணை ஒளியால் கவ்வி, இருட் காட்டை அழித்து வரும் நிலா' வைப்பற்றி இதுவரை யாருமே பாடாத உயரிய உவமைகளுடன் நமது கவிஞர் பாடுகிறார்.

அம்புலியை விண்மோகினியாகக் காட்டுகின்ற கவிதையின் எடுப்பே அற்புதக் கற்பனையாக மலர்கிறது:

'நீலவான் ஆடைக்குள் உடல் மறைத்து
நிலாவென்று காட்டுகின்றாய் ஒளிமுகத்தை!
கோல முழுதும் காட்டிவிட்டால் காதற்
கொள்ளையிலே இவ்வுலகம் சாமோ?'

பின்னர் சந்திரனை வியந்து கூறச் சிதறுகின்ற உவமைகள் மிக இனியன.

'வானச் சோலையிலே பூத்ததனிப் பூவோ நீ தான்!
சொக்க வெள்ளிப்பாற்குடமோ, அமுத ஊற்றோ?
காலை வந்த செம்பரிதி கடலில் மூழ்கிக்
கனல் மாறிக் குளிரடைந்த ஒளிப் பிழம்போ?

இதுவரை கவிகள் அம்புலியைக் கதிரவனின் காதலியாகவே கண்டார்கள். ஆனால் நமது கவிஞர் செங்கதிரின் மறுமலர்ச்சிதான் முழு மதியோ எனக் கேட்பது அருமையாக அமைந்துள்ளது.

இருள், உலகை, வானை, திசைகளை விழுங்குகிறது. இருள்! எங்கும் இருள். அவ் வேளையிலே ஒளிப்பூவாய்த் தலைதூக்குகிறது நிலா. அது என்ன? பெருமித வெற்றி பெற்ற காரிருள் சிரிக்கும் ஒளியா என்று கேட்கிறார் கவி.

காரிருள்தான் சிரித்த துண்டோ?
 பெருஞ்சிரிப்பின் ஒளி முத்தோ நிலவே நீதான்!
சிந்தாமல் சிதறாமல் அழகையெல்லாம்
 சேகரித்துக் குளிரேற்றி ஒளியும் ஊட்டி
இந்தாவென்றே இயற்கை அன்னை வானில்
 எழில் வாழ்வைச் சித்தரித்த வண்ணந்தானோ?

இந்த 'இன்பமெனும் பால் நுரையை, குளிர் விளக்கை' கண்டதனால் உள்ளத்தில் பொங்கி எழும் உணர்ச்சிக்கு உவமை ஏது! என்று சொல்ல வில்லை நம் கவி. 'ஊறிவரும் உணர்ச்சியினை எழுதுவதற்குத்தான் வார்த்தை' கிடைக்கவில் லையே தவிர எழில்மிகு உவமை பொங்குகிறது கவிதையில்.

உழைத்தாலும்கூட வயிறு நிரம்ப வகை யின்றி பசியால் செத்துக்கொண்டிருப்பவன் எதைக்கண்டு மட்டற்ற மகிழ்ச்சியடைவான்?

நித்திய தரித்திரராய் உழைத்துழைத்துத்
திணைத்துணையும் பயனின்றிப் பசித்த மக்கள்
சிறிதுகூழ் தேடுங்கால், பானை ஆரக்
கனத்திருந்த வெண்சோறு காணும் இன்பம்
கவின் நிலவே உனைக்காணும் இன்பம் தானோ!

சரிதானே! பானைச் சோறு பெற்ற தரித்திரனின் உள்ளப் பெருக்கை ஒத்தது, அழகுப் பசிகொண்டு எழில் பருகத் திரியும் கவியுள்ளம் முழு நிலவைக் கண்டதும் அடைகின்ற பூரிப்பு.

வேறொரு பாட்டு. நிலவைக் கண்டு கவியுள்ளம் மகிழ்கிறது. கவிதை உவமையாய் மின்னுகிறது, எழிலும் எளிமையும் உயிர்ப்பும் நிறைந்த சொற்களில்.

'முழுமை நிலா! அழகு நிலா!
முளைத்தது விண்மேலே—அது
பழமையிலே புது நினைவு
பாய்ந் தெழுந்தாற் போலே!
அமுதமுகம் சிரித்தது போல்
அல்லி விரிந்தாற்போல்—மேல்
கழற்றி எறிந்த வெள்ளித் தட்டு
தொத்திக் கிடந்தாற் போல்'

ரசிக்க ரசிக்க மகிழ்வுதரும் உவமைகள் இல்லையா இவை! இன்னுமொரு காட்சி. உருவகமாய் விளங்குகிறது, கற்பனையின் விரிவைக் காட்டும் விந்தை அது. என்ன?

கழுத்தை உயர்த்திக் கம்பீரமாகக் கூவும் சேவல், அங்குமிங்கும் சிதறுகின்ற குஞ்சுகளைக்

கண்காணிப்பதுடன், விழுங்கவரும் பூனையையும் விரட்டுகிறது.

இதற்கும் நிலவுக்கும் என்ன சம்பந்தம் என்றாலோ?

இதோ கவிதை.........

'பாற்புகை முகிலைச் சீய்த்துப்
பளிச்சென்று திங்கட் சேவல்
நாற்றிக்கும் குரல் எடுத்து
நல்லொளி பாய்ச்சிப், பெட்டை
ஏற்பாட்டுக் கடங்காப் பொட்டுப்
பொடிவிண்மீன் குஞ்சு கட்கும்
மேற்பார்வை செலுத்திப் பூனை
இருட்டையும் வெருத்துத் தள்ளும்!

இயற்கையையும் அழகையும் ஆராயும் உள்ளத்தில் எழுந்த இந்த உவமையைப் போற்றாமல் இருக்க முடியுமா?

என்றும் பாடியிருக்கிறார்.

'தனிஒரு வெள்ளிக்கலம்—சிந்தும்
தரளங்கள் போல்வன—நிலவு நட்சத்திரம்'

உஷைப் பெண்ணாள் மலர்க்கண் திறந்ததையும், கதிர்காதலன் வரவுக்கண்டு அவள் கன்னம் சிவந்ததையும்தான் நான் கண்டதுண்டு. இந்த உவமைகளோ விந்தையாய், புதுமையாய், உண்மையாய் பொருத்தமாய் மிளிர்கின்றன தமிழில்.

# உதயமும் இரவும்

'கேள்வியால் அகலும் மடமைபோல்
நள்ளிரவு மெதுவாய் நடந்து கொண்டிருந்தது.
தொட்டி நீலத்தில் சுண்ணாம்பு கலந்த
கலப்பென இருள்தன் கட்டுக் குலைந்தது'

இவ்விதம் சூரியோதயம் நிகழ்கிறது. கதிரோன் அடிமையைத் தகர்த்தெறிந்து ஓங்குவதுபோல.

ஒலிகடல் நீலப் பெட்டி
உடைத் தெழுந்தது கதிர்தான்!'
'எழுந்தது செங்கதிர் தான்
கடல்மிசை! அடடா எங்கும்
விழுந்தது தங்கத் தூற்றல்!
வெளியெலாம் ஒளியின் வீச்சு!
முழங்கிய நீர்ப் பரப்பின்
முழுதும் பொன்னொளி பறக்கும்
பழங்கால இயற்கை செயும்
புதுக்காட்சி!'

என வர்ணனையில் புதுமை செய்யும் கவிஞர், கதிரவனை, சோலை, பெருமையாக விளம்பரப் படுத்தும் கனி என்கிறார்.

'அக்கரை, சோலை போலத்
தோன்றிடும்! அந்தச் சோலை
திக்கெலாம் தெரியக் காட்டும்
இளங்கதிர்ச் செம்பழத்தை

மேலும், 'கதிர் இருட்பலாவை உரித்து ஒளிச் சுளை ஊட்டிற்று' என்றும் 'பொங்கியும் பொலிந்

தும் நீண்ட புதுப்பிடர் மயிர்சிலிர்க்கும் சிங்கம்' எனவும் அவர் ஞாயிற்றைக் காட்டுவது அழகா யிருக்கிறது.

ஒளியின் மலர்ச்சி பற்றி அழகாக இசைத் துள்ள கவிஞர் ஒளி தேய்ந்து இருள் பெருகுவதை வர்ணிக்கும்போதும் இனிய உவமைகளைக் கையாண்டிருக்கிறார். அவை எல்லாம் 'ஆகா!' 'அபாரம்' என ரசித்துப் போற்றுதற்குரியன.

'குடும்ப விளக்கு' எனும் காவியத்தில் இரவின் பவனியை எழிலாகச் சித்திரித்திருக்கிறார் பாரதி தாசன். விருந்து உண்டு, ஆடை மாற்றி, அழகு செய்து கொண்டு, சிலம்பொலி கட்டியம் கூற ஒயிலோடு வருகிறாளாம் இரவுப் பெண்ணாள். இந்த உருவகம் எளிதாய்ப் புரிந்து விடும், கவிதை யைப் படித்தால்—

'மேற்றிசைக் கதிர்ப் பழத்தை
விருந்துண்டு, நீல ஆடை
மாற்றுடையாய் உடுத்து
மரகத அணிகள் பூண்டு
கோற்கிளை ஒடுங்கும் புற்கள்
கொட்டிடும் இலகின் சந்தக்
காற்சிலம் பசையக் காதற்
கரும்பான இரவு' வந்தது

இருளை ஆடையாகவும், விண்மீன்களை அணிகளாகவும் பூண்ட கோலத்தைக் காணும் கவி வேறோர் இடத்திலே வினவுகிறார்; 'புனை

யிருள் அந்திப் பெண்ணாள் ஒளி போர்த்த துண்டோ, எழில் பூத்ததுண்டோ?' என்று

'நீலம் கரைத்த நிறைகுடத்தின் உட்புறம்போல்
ஞாலம் கறுப்பாக்கும் நள்ளிருளில்—சோலை உதிர்
பூவென்ன மக்கள் துயில் கிடக்கும்போது

என்ற உவமை அழகாக இருக்கிறது.

இரவுப் பெண்ணாள் பின்னழகு காட்டி நிற்கிறாளாம். அழகின் காதலன் காணும் எழில் நிறை தோற்றம் எப்படியிருக்கிறது? இதோ காட்சி...

வெள்ளை முத்துக்கள் தைத்த
போர்வையே மேனி போர்த்த
...உடல் திருப்பிக்
கண்மலர் திருப்பி நின்றாய்!
பின்புறம் கரிய கூந்தற்
கொண்டையில் ஒளியைக் கொட்டும்
குளிர்நிலா வயிர வில்லை!'

காணக்காணக் களிப்பூட்டும் காட்சிதானே!

# அழகின் சிரிப்பு

அழகின் ஒளிவிளக்குகளான சந்திரனையும், சூரியனையும் அழகுக் கவிதையில் பதித்தது போலவே, இயற்கைச் செல்வங்கள் அனைத்தையும் பற்றிய இனிய பாடல்கள் கவிஞரின் சிருஷ்டிகளில் மிளிர்கின்றன. அழகின் துகள்கள் எல்லாம் தனி அழகாய் மின்னுகின்றன அவரது கவிதைகளில். 'அழகின் சிரிப்பு' என்ற நூல் முழுவதும் எழிற் கவிதைகளின் பூரிப்பு! உவமைகளின் பேரெழில்! காணும் இடங்களில் எல்லாம் அழகு சிரிப்பதுபோல கவிஞரின் பாடல்களில் எங்கும் உவமை குலுங்குகிறது. தமிழ் விருந்து சுவைக்கும் உள்ளங்களுக்கு ஆனந்தம்தான்.

அலையெறியும் மாகடலின் தோற்றம் விந்தைக் காட்சியாக உருவாகிறது.

'கடலிடைப் புனலில் ஆடிக்
குளிரினிற் கனிந்த காற்றை
உடலிடைப் பூசுகின்ற
ஒலிகடற் கரையின் ஓரம்
அடர்சிற கன்னப் புட்கள்,
அணிபோல அலை நடக்கும்'

இவ்விதம் 'குடும்பவிளக்கு' கூறுகிறது. 'அழகின் சிரிப்பு' இதே அன்னப் பறவைகளின் வரிசைபோல் நடைபயிலும் அலைகளை வர்ணிக்கும் விதம் வேறு:

'வெள்ளிய அன்னக் கூட்டம்
விளையாடி வீழ்வதைப் போல்
துள்ளியே அலைகள் மேன்மேல்
கரையினிற் சுழன்று வீழும்!'

எழுந்து புரண்டும் உருளுகின்ற அலைகள் கும்மாளியிடும் கோலம் சிறுவர்களின் தன்மையை நினைவுறுத்துகிறது கவிஞருக்கு. உடனே உவமையாக மலர்கிறது.

'பெருங்கடல் ஓர மெல்லாம்
கீரியின் உடல் வண்ணம் போல்
மணல் மெத்தை அம் மெத்தை மேல்
நேரிடும் அலையோ, கல்வி
நிலையத்தின் இளைஞர் போலப்
பூரிப்பால் ஏறும், வீழும்.
புரண்டிடும்'

'கீரியின் உடல் வண்ணம்போல்' என்று கூறும் நயம் கவனிக்கத்தக்கது.

இயற்கையில் ஒரு கூத்து. இசையரங்கு கடலருகில் நடைபெறுகிறது. இதோ உருவகமாகிறது அவ்வரங்கு.

'கடல் நீரும் நீலவானும்
கைகோக்கும்! அதற் கிதற்கும்
இடையிலே கிடக்கும் வெள்ளம்
எழில் வீணை. அவ்வீணை மேல்
அடிக்கின்ற காற்றோ வீணை
நரம்பினை அசைத் தின்பத்தை
வடிக்கின்ற புலவன்!'

அழகு மிக்க கடல்மங்கை அழகு செய்து மினுக்குவதில் ஆசை உடையவள், பெண்களைப்

போல! அவள் அடிக்கடி உடை மாற்றம் செய்து பகட்டும் கோலம் நன்றாகத்தானிருக்கிறது. கவிதையிலும்தான்!

'தங்க இழையுடன் நூலை வைத்துப்
பின்னிய ஆடை, காற்றில்
பெயர்ந் தாடி அசைவதைப் போல்
நன்னீரில் கதிர் கலந்து
நளிர் கடல் நெளிதல் கண்டேன்'

கொண்ட ஆடை பளபளப்பது போலக் கதிரொளியில் தகதகக்கும் கடல் உடை மாற்றுகிறது எப்படி?

'பொன்னுடை களைந்து வேறே
பதிதான முத்துச் சேலை
தன் இடை அணிந்தாள் அந்தக்
தடங்கடற் பெண்ணாள். தம்பி
என்னென்று கேள். அதோ பார்,
எழில் நிலா ஒளி கொட்டிற்று!'

கடல் வனப்புக்காட்டிய கவிஞர் ஆற்றை வர்ணிக்கிறார். ஆற்றில் வெள்ளம் வருகிறது. எப்படி? 'பெருஞ்சிங்கம் அறைய வீழும் யானை போல், பெருகிப் பாய்ந்து வரும் வெள்ளம்.'

வெள்ளத்தைச் சித்திரிக்கும் உவமைகள் அத்தனையும் அழகின் சிரிப்பு.

இரு கரையும் ததும்பும் வெள்ள
நெளிவினில் எறியும் தங்கச்

சரிவுகள்! நுரையோ முத்துத்
தடுக்குகள்! சுழல் மீன் கொத்தி
மரகத வீச்சு! நீரில்
மிதக்கின்ற மரங்களின் மேல்
ஒரு நாரை வெண்டாழம் பூ!
உவப்புக்கோ உவமையில்லை!

வெள்ளம் முன்னேறுகிறது. ஆற்றங்கரை மரங்களின் மலர்கள் நீர்மேல் விழுகின்றன, வெள்ளத்தை வாழ்த்துவது போல. ஏன்?

வெள்ளம் பாய்வது எப்படி இருக்கிறது? அது ஒரு படையெடுப்பு!

'ஒரே வகை ஆடை பூண்ட
பெரும் படை ஒழுங்காய் நின்று
சரேலெனப் பகை மேற் பாயும்
தன்மை போல் ஆற்று வெள்ளம்
இராவெலாம் நடத்தல் கண்ட
இருகரை மரங்கள், தோல்வி
வரா வண்ணம் நெஞ்சால் வாழ்த்தி
மலர் வீசும் கிளைத்தோள் நீட்டி!'

அருவிகளும், கொடிகளும், மலர்களும் நிறைந்த காடு! குருவிகள், தத்தித் திரிகின்றன. வேங்கை ஒன்று எருதுமேல் பாய்கிறது. தரையெங்கும் அவ்வளவையும் காணும் கண்கள் சிந்தையிலே ஒப்புகளையும் உண்டாக்குகின்றன.

அருவிகள், வயிரத் தொங்கல்
அடர் கொடி, பச்சைப் பட்டே!
குருவிகள், தங்கக் கட்டி
குளிர்மலர், மணியின் குப்பை!

எருதின்மேற் பாயும் வேங்கை
நிலவுமேல் எழுந்த மின்னல்!
சருகெலாம் ஒளிசேர் தங்கத்
தகடுகள் பாரடா நீ!

தாமரை பூத்த தடாகத்தைக் காட்டுகிறார் கவி. இலைக்காடுகளிடையே அற்புதமாய்த் தலை நிமிர்ந்து நிற்கும் அரும்புகள்... அலரும் மலர்கள்... நீர்ப்பரப்பு எல்லாமே அழகுமயம். அவை எப்படித் தோன்றுகின்றன என்று கவிஞர் உவமையுடன் கூறுவது அழகுக்கு அழகு செய்கிறது.

'பச்சை
இலைத் தட்டில் சிந்தும் பால் போல்
எழில் நீரும், கரிய பாம்பின்
தலைகள் போல் நிமிர்ந்திருந்த
தாமரைச் சிற்றரும்பும்'
'மாணிக்கம் சிதறுதல் போல்
இருக்கும் அப் பச்சிலை மேல்
அரும்புகள் இதழ் விரிக்கும்'!

விரிந்த இதழ்க்கூட்டம் எவ்விதம் காட்சியளிக்கிறது? பச்சைப் பட்டு போர்த்த மங்கையர்கள் செவ்விதழால் வானைப் பார்த்து சிரிக்கின்றார்களோ என எண்ணத் தோன்றுகிறது!

'விரிக்கின்ற பச்சைப் பட்டை
மேனி போர்த்துக் கிடந்து
வரிக்கின்ற பெண்கள், வான
வீதியைப் பார்த்துப் பார்த்துச்
சிரிக்கின்ற இதழ்க் கூட்டத்தார்'

நீர் மீது மிதக்கும் இலைகளிலே பாதரசச் சிதறல்கள் போல நீர் உருண்டு ஓடுகிறதல்லவா?

அப்படி உருளும் நீர்க்குண்டுகள், இலை, நீர் மூன்றையும் எடுத்துக்காட்ட ஒரு உவமை இருக்கிறது.

'கண்ணாடித் தரையின் மீது
கண்கவர் பச்சைத் தட்டில்
எண்ணாத ஒளி முத்துக்கள்
இறைத்தது போல்.'

பொருத்தமாகவும் அழகாகவும் இருக்கிறதல்லவா?

முல்லையைப் பற்றிக் கவிஞர் பாடியிருக்கும் அழகான கவிதைதான் உங்களுக்குத் தெரியுமே. உயிர்ப்பு நிறைந்த பாடல். உவமை நிறைந்ததும் கூட. ஒரு முறை படித்தால் மீண்டும் படிக்கும்படி ஆசையைத் தூண்டுவது. வானத்து மீன்களைப் போல் கண்சிமிட்டும் முல்லை மலர்கள் அச்சில் அடித்த வெள்ளிப்பணம் போல் விளங்குகின்றன எனக் கூறுவது வியப்பதற்குரிய உவமை இல்லையா? அந்தக் கவிதையையே சுவைக்கலாமே—

'பச்சைப் பசுந் தலைக் காட்டினிலே ஒரு
பக்கத்தில் பூத்திட்ட முல்லையைப் பார்!
அச்சடையாளம் நல் வான் குளத்தில் மின்னும்
ஆயிரம் மீனெனத் தோன்றுமடி!
அச்சில் அடித்திட்ட வெள்ளிப்பணம் கையில்
அள்ளி இறைத்தது போல் இருக்கும்!'

மலர்களையும் நீர்ப்பெருக்கையும் பிறவற்றையும் கண்டு களித்த கவி பறவை இனத்தின் சிறப்பைக் காணாதிருக்க முடியுமா? அவற்றிலே

அழகைக் கண்டார். அவ்வளவும் கவிதையாயின. சிட்டுக்கள் பாய்வது, புறாக்கள் திரிவது, மயிலின் ஆட்டம் அனைத்துக்கும் உவமைகள் சொக்கழகுச் சொற்களாக அமைந்துள்ளன.

புறாக்கூட்டம் அனைவரின் கவனத்தையும்தான் கவர்கிறது. ஆனால் வண்ண வண்ணப் புறாக்களுக்கு ஏற்ற உவமைகள் உதிர்ப்பது என்பது எல்லோராலும் இயலாது. அதிலும் பாரதிதாசன் கூறுவது போல் உவமிக்க யாராலும் முடியாது. இது உறுதி. உயர்வு நவிற்சியல்ல. இதோ பாருங்கள்......

'கீழ்ச் சரிந்த கோட்டுப்பூப் போற் புறாக்கள் குதித்தன.' அவை எப்படி எப்படி இருந்தனவாம் என்றால்,

'இரு நிலா இணைந்து பாடி இரையுண்ணும்'

வெள்ளைப் புறாக்கள் இரண்டு 'நிலா'வாக மின்னுகின்றன. மற்றிரண்டு தாமரைப் பூப்போல. எத்தகைய தாமரை?

'செவ்விதழ்கள் விரியாத தாமரை போல் ஓர் இணை!'
சிலவோ 'மெல்லியர்கள் கருங்கொண்டை' இன்னும்
'கட்டி ஈயம்
காயாம்பூக் கொத்து, மேலும்
ஒரு பக்கம் இரு வாழைப்பூ
உயிருள்ள அழகின் மேய்ச்சல்!'

அடுக்கி வந்த உவமைகள் அத்தனைக்கும் அழகின் முத்தாய்ப்பாக விழுந்திருக்கிறது. 'உயிருள்ள அழகின் மேய்ச்சல்' என்பது.

சிட்டுக்கள் பறந்து வந்து தழை கிளை மீது வீழ்வதை 'வானத்துக் குமிழ் பறந்து வையத்தில்

வீழ்வதைப் போல்' என்று அழகாகச் சொல்கிறார். பின் அவை 'பூனைக்கண் போல் ஒளிக்கும்' என்பதும் நன்று.

மயில் வனப்பைப் பிரதிபலிக்கும் கவிதை மிக நன்று ; இனியது. மயிலின் தோகை புனையாச் சித்திரம். ஒளிசேர் நவமணிக் களஞ்சியம். அதன் கொண்டை?

'உள்ளக் களிப்பின் ஒலியின் கற்றை
உச்சியில் கொண்டையாய் உயர்ந்ததோ என்னவோ!'

என்கிறார் கவிஞர்.

'ஆயிரம் ஆயிரம் அம்பொற் காசுகள்
ஆயிரம் ஆயிரம் அம்பிறை நிலவுகள்
மரகத உருக்கின் வண்ணத் தடாகம்
ஆனஉன் மெல்லுடல்.'

என வர்ணிப்பது நம் கவிஞருக்கே உரிய தனிப் பண்பு.

பறவையினத்தின் அங்கங்களுக்கு அவர் அருமையான உவமைகள் குறித்திருக்கின்றார். சிறப்பானவை, திறமையின் மின்வெட்டுக்கள் அவை.

கிளியின் மூக்கு 'இலவின் காய்போலும் செக்கச் செவேலென இருக்கும்.' 'இலகிடு மணல் தக்காளி எழில் ஒளிச் செங்காய்க் கண்கள்' அதனுடையது. வால் 'ஒளி தழுவும் மாவின் நெட்டிலை.' 'புன்னை இலை' போன்றது.

சிட்டின் கண்கள் மல்லி பிளந்தது போன்றவை,' 'தேனிறை முல்லைக் காம்பின் சிற்றடி' அதற்கு.

இன்னும்......

'கொன்றைக் காய்க்கு நிகரான வாலை ஆட்டும் காரெலி' என்ற உவமையும் குறிப்பிடத் தக்கது.

# இயற்கை வாழ்வு

இயற்கையில் காணும் பண்புகளை வாழ்வின் உண்மைகளுக்குப் பொருத்தமாக ஒப்புவமை கூறுவது திறமையான செயல். இதற்கு வாழ்வின் அம்சங்களைப் கவனிப்பது போலவே இயற்கையை ஆராயும் தன்மையும் தேவை. இத் தகைய பண்பு இருந்தால் மற்றவர்கள் சர்வ சாதாரணமானவை எனப் புறக்கணிக்கிற வற்றைக் கூட அழகான உண்மைகளாக ஒளிரும் படி செய்யலாம்.

பழந்தமிழ்ப் புலவர்களில் கபிலர் இயற்கை யோடியைந்த வாழ்வு நடத்தியதுடன் வாழ்க்கை யையும் நன்கு ஆராய்ந்தவர் என்பதற்குச் சான்று கூறும் அவரது நூல்கள் என்பர். உதாரணமாக, ஒரு உவமைப் பகுதி.

நெடிதுயர்ந்த இலுப்பை மரத்தில் 'நெஞ்சிற் கனல் மணக்கும்' பூக்கள் நிறைந்திருக்கின்றன. மறுநாள் மரத்தடியில் வட்டமாகப் பூக்கள் வாடி உதிர்ந்து கிடக்கின்றன. இயற்கைக் காட்சி களான இதற்கு வாழ்வில் கண்ட ஒன்றை ஒப்பிடு கிறார் கபிலர். சர்வ சாதாரணமானதே. இலுப்பை யின் வட்ட வான் பூக்கள் வாடாதாயின் கலை யின்கோடு ஏய்க்கும்மே' என்று கூறிய கபிலர் வாடி மரத்தடியில் வட்டமாகப் பரந்து கிடக்கும் மலர்களுக்கு எதை உவமை கூறுகிறார்? பரதர்

தம் மனைதோறும் உலர்வதற்காக வெளியே வட்டம் பரப்பியிருக்கும் மீன்களைப்போல் கிடக்கின்றன என்கிறார். மரத்தின் பூ, மான்கொம்பு, செம்படவர்கள் காயப்போடும் மீன்கள் அனைத்தையும் அழகாக இணைத்துள்ளார் உவமையாக. அது கலை.

பார்க்கப் போனால், கவிஞர் பாரதிதாசன் இந்தக் கலையில் மிகவும் கைவந்தவர் என்பதை அவரது கவிதைகள் காட்டுகின்றன. சாதாரண விஷயங்களும் அவரிடம் உயர்ந்த இடத்தைப் பெற்றுவிடுகின்றன. எளிய பொருள்களும் எழில் மிக்க உண்மைகளாக உருவெடுக்கின்றன.

தேன்குழல் கிடைத்தால் பொதுவாக உடனே வாயில் போடத்தான் எழுச்சி பிறக்கும். அது எப்படி இருக்கிறது, அதற்கு என்ன உவமை கூறலாம் என்று கலை ஆராய்ச்சி செய்ய ஓடாது. கவியுள்ளம் இதையெல்லாம் ஆராய்ந்துகொண்டிருக்க வேண்டுமென்பதில்லை. பார்த்த உடனேயே, முன்பு கண்ட ஒரு பொருள் ஓடி வந்து நினைவில் நிழலாடுகிறது. இதற்கு இணையாக. சமயம் வந்தபோது இரண்டும் கவிதையில் இடம் பெற்று விடுகின்றன. இதுதான் திறமையின் வேலை.

பாரதிதாசன் தேன்குழலுக்கு மட்டுமல்ல, இன்னும் எவ்வளவோ சிறு சிறு பொருள்களுக்கும் அழகான, கவர்ச்சிகரமான உவமைகள் கொடுத்திருக்கிறார். அவரது நூல்களில் அங்குமிங்குமாகச் சிதறிக் கிடக்கும் அவை இதோ—

'மீன்வலை சேர்ந்தும் கயிற்றை வேய்ந்த வளையம்
போல் தேன்குழல் பிழிந்து'

'விழுந்து படும் செங்கதிரை வேல் துளைத்ததைப்
போல் உழுந்து வடை'

'கொட்டித் தும்பைப் பூக்குவித்தது போல்
பிட்டு நறு நெய்யில் பிசைந்து வைக்க'

'தாழையின் முள் போன்ற சீரகச் சம்பா'

'முதலைகள் கிடப்பதைப் போல்
சின்னதும் பெரிதுமான வெடிப்புகள்' (தரையில்)
உரித்த நற்றாழம் பூவின்
நறும்பொடி உதிர்ந்ததைப் போல்
பெரு மணல்'

'சின்ன மூக்குத் திருகொடு தொங்கும்
பொன்னாற் செய்த பொடி முத்தைப்போல்
துளி ஒளி விளக்கு'

'அணில் வால் போல் குலை முத்துச் சோளக்
கொல்லை'

'உழுந்து கிடந்த ஒரு களம் போலவும்
வேம்பின் பழம்பூ விரிதரை போலவும்
ஈயின் காடும் எறும்பின் காடும்'

'குத்துண்ட கண்ணாடி கொண்ட பல விரல்கள்
போல்
துத்திக்காய் போலச் சுடர் முகத்தை நீ சுருக்கி
ஏனழுதாய், என்றன் இசைப்பாட்டே
கண்ணுறங்கு!
வான் நழுவி வந்த பிறையே கண்ணுறங்கு!

இனி, வாழ்வில் கண்ட பல தத்துவங்களை இயற்கைப் பண்புகளுக்கு ஏற்ப எப்படி உவமை

களாக மாற்றியிருக்கிறார் கவிஞர் என்பதைக் கவனிப்போம்.

அன்னையின் அன்பு ஒவ்வொருவராலும் உணரப்படுவது. அன்னையைத்தான் காணமுடியுமே தவிர அவள் அன்பைப் பார்க்க முடியாது. அதனால் அன்பு இல்லை என்றாகிவிடுமா? உயிர்க்குலத்தையே வாழ்விக்கும் பண்புஅல்லவா அது? இந்த உண்மையை பாரதிதாசன் தென்றலுக்கு ஏற்றிச் சொல்லுகிறார், தென்றலின் தன்மை இது போலிருக்கிறதென்று.

'பெற்ற
அன்னையைக் கண்டோர், அன்னை
அன்பினைக் கண்ணிற் காணார்
என்னிலும், உயிர்க் கூட்டத்தை
இணைத்திடல் அன்பே அன்றோ?'

பறவைகள் கூட்டைத் திறந்தவுடன் வேகமாய்ப் பாய்கின்றன. ஆனால் திரும்பவும் மாலையில்வந்து அடைபடுகின்றன. அவற்றை அடைப்பவன் செயலோ அழகை மூடிவைப்பது போல்தான் உள்ளது.

'கூட்டமாய்ப் பறந்து போகும்
சுழற்றிய கூர்வாள் போலே
கூட்டினில் அடையும் வந்தே
கொத்தடிமைகள் போலே
'சாத்தினான், குழைத்து வண்ணம்
தீட்டிய ஓவியத்தைத்
திரையிட்டு மறைத்தல் போலே'

இருள் அடர்ந்த வீடு. இருளை ஓட்ட மங்கை விளக்கேற்றுகிறாள். அதன் சுடர் மின்னுகிறது. அதைப்போல் இலங்குகிறது இயற்கையிலே ஒன்று. எது?

எரியும் விளக்கு அழகியது, அச்சுடரிலே மற்றுமோர் விளக்கை ஏற்றி எடுத்துச் செல்வதும் அழகு நிறைந்ததே. இவ்அழகுத் தொழிலைச் செய்வது போலக் கிளி கொத்திப் போகிறது. இது விளக்கினில் விளக்கை ஏற்றிச் செல்வதுபோல் ஒளி வீசுகிறது என்பது கவிதை.

'பச்சிலை மேல்
பளிச் சென எரியும் கோவைப்
பழத்தில் உன் மூக்கை ஊன்றி
விளக்கினில் விளக்கை ஏற்றிச்
செல்லல் போல் சென்றாய்; ஆலின்
கிளைக்கிடை இலையும் காயும்
கிடத்தல் போல் கிடந்தாய்!'

புகை எங்கும் பரவுதலை 'பெரியோரின் உள்ளம் எங்கும் பெருகல்போல் பெருகி' என்றும், சொல்வதைக் கவனியாமல் 'முந்திரிக்கொட்டைத் தனம்' செய்கிறவனிடம் 'குறிப்பறியாமல் நீவிர், குண்டானிற் கவிழ்த்த நீர் போல் கொட்டாதீர்' எனவும், இருளில் வழிதடவி நடக்கும் சிரமத்தை 'ஓடைக்குள் காலால் வழிதடவும் கஷ்டம் போல்' என்றும் கூறுவது ரசிக்கவேண்டிய பகுதி.

கவனிப்பாக ஒன்றை நிறைவேற்றுவதை கண்ணாடிப் பாத்திரத்தைக் கல் தரையில் வைப்

பதுபோல்' என்றும், யோசித்து ஒன்றின் கருத்தை விளக்குவதை 'சுவையறிந்த பிறகு உணவின் சுகம் சொல்வார் போல்' என்றும் கூறும் உவமைகள் ரசனைக்குரியன.

கிட்டாத நிலையில் ஒரு நல்ல பொருள் அகப்படுவதால் அடையும் பெருமகிழ்வுக்கு இந்த உவமை சாலவும் பொருந்தும்:

'சிந்தை நைந்து
கைம்மையாய் வாழ்வாள் நல்ல
கணவனைப் பெற்றதைப் போல்'

வானிலே விந்தை உருவங்கள் செய்த மேகங்கள் குன்றிலே புகையாய்க் கவிகின்றன. பனிப் படலம்போல் மேகம் சூழ்ந்த குன்று அடிமையின் உள்ளம் போல் புகைகிறதாகக் கற்பனை. அதை விளக்கும் பாட்டு:

'ஆனைகள் முதலைக் கூட்டம்
ஆயிரம் கருங்குரங்கு
வானிலே காட்டி வந்த
வண்முகில் ஒன்று கூடிப்
பானையில் ஊற்றுகின்ற
பதநீர் போல் குன்றில் மொய்க்கப்
போனது. அடிமை நெஞ்சம்
புகைதல் போல் தோன்றும் குன்றம்'

## நகைச் சுவை

கவிதையில் நகைச்சுவையைத் திறம்படக் கலப்பதில் கவிஞர் பாரதிதாசன் வல்லவர் என்பது யாவரும் அறிந்ததே. தென்றல் போன்ற இனிய நகைச்சுவையுடன், முரட்டுக் கிண்டலும் அவரது கவிதையில் ஆங்காங்கே தொனிப்பது உண்டு.

அதே இயல்பு உவமைகளிலும் சில இடங்களில் காணக்கிடக்கிறது. 'இருண்ட வீடு' காவியத்திலிருந்து சில உவமைகள்...

சோம்பலின் அவதாரமான வீட்டுக்காரி நீட்டிநெளிந்து எழுகிறாள். அவளைப் பார்க்கவே சகிக்காது. அவ்விதத் தோற்றம். அவளை அறிமுகம் செய்யும் கவிஞர் கூறுகிறார்:

'பொத்தல் மரத்தில் புழுப் போல் நெளிந்தே
எழுந்தாள்! அவளோ, பிழிந்து போட்ட
கருப்பஞ் சக்கையின் கற்றைபோல் இருந்தாள்'

அவளது கண்ணழகை நயமாகக் காட்டுகிறது. இந்த வரிகள்—

'பாதி திறந்த கோதையின் விழியோ
பலகறை நடுவில் பதித்த கோடுபோல்
தோன்றிற்று!'

அவள் எழுந்துபோய்க் கோலமிட ஆரம்பித்தாள். அவள் எண்ணியது என்னவோ தாமரைப்

பூக்கோலம் போடத்தான். ஆனால் முடிந்த லட்சணமோ? விளக்கு மாற்றுக்கட்டை சிதறி விழுந்தது போல!

'அவள் குழல்
முள்ளம் பன்றி முழு துடல் சிலிர்த்தல் போல்
மேலெழுந்து நின்று விரிந்து கிடந்தது!
வாலிழந்து போன மந்தி முகத்தாள்
கோல மிடவும் குனிந்தாள்; தாமரை
போல எழுதப் போட்ட திட்டம்
சிறிது தவறவே தேய்ந்து துடைப்பம்
அவிழ்ந்து சிதறுமே அப்படி முடிந்தது!'

அவள் வேலை செய்து அலுத்துப் போய் இரவில் தரையில் விழுகிறாளே தூங்குவதற்காக அதற்கு உதாரணம்—

'நவாபுக் குதிரை நாடு முழுதும்
சவாரி வந்து தரையிற் புரளல் போல்
படுத்துப் புரண்டு பிடித்தாள் தூக்கம்!'

# தமிழ்

இதுவரை கண்ட உவமைகளிலேயே கவிஞர் பாரதிதாசனுக்கு உரிய பல தனிச் சிறப்புகளை அனுபவித்தோம். அவற்றுக்கெல்லாம் மேலாக அமைந்திருப்பது தமிழையும் தமிழன் பண்பையும் ஏற்ற உவமைப் பொருள்களாக மாற்றிக் கலந்திருப்பது. கவிஞரின் தமிழ்க் காதல் அவ்விதம் ஒளி வீசி மின்னுகிறது.

'தனிமைச் சுவையுள்ள சொல்லை—எங்கள் தமிழினும் வேறெங்கும் யான் கண்டதில்லை' என்றுதான் சொல்லவேண்டும்.

காதலன் தனது காதலியை உவமைகளால் அர்ச்சித்து 'எந்தன் தீந்தமிழே!' என் முத்தாய்ப்பு வைப்பதையும், அவள் கன்னங்கள் 'தமிழ்ச் சுவடி' யாவதையும், அவனும் அவளும் கலந்திருப்பதை 'தமிழும் அன்பும் கலந்தது போல' என்று குறிப்பதையும் நமது கவிஞரின் நூல்களில் தான் காணமுடியும்.

'தண்டமிழின் இனிமைபோல் இனிய சொல்லான்' 'தணல் நிற மாம்பழத்தில் தமிழ் நிகர் சுவையைக் கண்டாள்'—இப்படி எவ்வளவோ. 'இனிமைத் தமிழ் மொழி எமது; எமக்கின்பந் தரும்படி வாய்த்த நல்அமுது' என்று கூறும் கவிஞர் தமிழையும் தமிழாராய்ச்சி சிறப்பையும்

இனிய உவமைகளாக்கி எல்லோருக்கும் இன்ப அமுது அளிக்கிறார் என்றால் அது மிகையல்ல.

குழந்தைகள் உணவு உண்பது எப்படி இருக்கிறதாம்? படித்தவர்கள் பழந்தமிழ் இலக்கிய நயங்களை சுவைத்து அள்ளி விழுங்குவது போல.

'குழந்தைகள் உடனிருந்து
கொஞ்சியே உண்ணுகின்றார்
பழந்தமிழ்ப் பொருளை அள்ளிப்
படித்தவர் விழுங்குதல் போல்'

என்பது கவிதை. இன்னும் 'வல்லார் இலக்கியத்தை வாரி அருந்துதல் போல் சிற்றுணவு உண்கிறார்கள்' என்று வேறிடத்தில் குறிக்கின்றார்.

தமிழின் இலக்கிய நயத்தை ருசிப்பவர் தனிமையில் அமர்ந்து அதை எண்ணி எண்ணிக் களிப்பது இயல்பு. இதைப்பொருத்தமான உவமையாக்குகிறார். எதற்கு? உள்ளத்தைக் கவர்ந்து ஓடி மறைந்த காதலியை நினைத்து உருகுகின்ற காதலனுக்கு!

'நெஞ்சைக்
கிளி பறித்துப் போனதால் மரம்போல் அங்கே
தண்டமிழ்த்தேன் உண்டவர்கள் பொருளை
எண்ணித்
தனிப்பார் போல் தனித்திருந்தான்'

குடும்பத் தலைவி துணிகளைக் கவனித்து, கிழிந்திருப்பதைத் தைக்கும் பான்மையை

பண்டிதர்கள் பழங்கதையின் ஓட்டைக்கெல்லாம்
தணிக்கையிடல் போல் அனைத்தும் தணிக்கை
செய்தாள்

என்று கூறும் நயம் உய்த்து உணரவேண்டியது. அறிஞர்கள் என்ன செய்கிறார்கள்? ஆரம்பகாலத்தில் மௌனத்தாழ்ந்து தமிழாராய்கிறார்கள். பிறகு, தாம் அறிந்த நயங்களை எல்லோரும் அனுபவித்து இன்பம் பெறுவதற்காக, எடுத்துக் கூறுகிறார்கள். ஒரு வகையில் மலர்களும் அதே போல விருந்தளிக்கின்றன. இந்த உண்மையைக் கவிஞர் இணைத்துக் காட்டும்போது 'ஆகா' என வியக்க நேரிடுகிறது.

'மூடிய வாய் திறத்து
உளமார மூன்னாளெல்லாம்
தேடிய தமிழுணர்வைத்
தின்னவே பலர்க்கும் தந்தும்
வாடாத புலவர் போலே
அரும்பிப் பின்மலர்ந்த பூக்கள்
வாடாது தேன் கொடுக்கும்
வண்டுகள் அதைக் குடிக்கும்'

குன்றத்தை இருள் மூடுகிறது. இருளில் குன்றம் மறைந்து விடுகிறது. அப்படி ஆழ்ந்த நிலையில் அதற்கு உவமை என்ன?

'இருந்த ஓர் கருந்திரைக்குள்
இட்டபொற் குவியல் போலே
கருந்தமிழ்ச் சொல்லுக்குள்ளே
கருத்துக்கள் இருத்தல் போலே
இருள் மூடிற்று குன்றத்தை'

தமிழ்ச் சொல்லுக்குள் கருத்துக்கள் இருத்தல் போலே என்று சொன்ன உடனேயே 'அடடா' என்ன பொருத்தம்! என்று ரசிக்கிறோமல்லவா!

தமிழ் மொழி அலட்சியம் செய்யப்படுவதைக் கண்ட கவியுள்ளம் துயருறுகிறது. அந்த நிலையிலே உணர்ச்சி, சொற்களாக உருளுகின்றது.

இருளுக்குள் சித்திரத்தின் திறன்
ஏற்படுமோ? இன்பம் வாய்த்திடுமோ?
உருவற்றுப் போனதுண்டோ—மிக்க
உயர்வுற்ற தமிழ்மக்கள் உணர்வுற்ற நல்வாழ்வு?
கருவுற்ற செந்தமிழ்ச் சொல்—ஒரு
கதியற்றுப் போனதுண்டோ!

தமிழில் இசைக்கின்றாள் ஒருத்தி. அத்தனையும் இன்பப்பெருக்கு. அது உள்ளத்தைத் தொடாமலா போகும்! களிப்பு கவிதையாக மாறுகிறது.

உள்ளத்தில் கவிதை வைத்தே
உயிரினால் எழுப்பினாள். அவ்
வெள்ளத்தில் கலையைக் கோத்தாள்
வீணையின் அளவிற் சாய்த்தாள்

இன்னிசை பொங்கி வழிந்து ஓடியது. கேட்போர் செவியில் பாய்ந்து உள்ளத்தை நனைத்தது. அதனால் பெறுகிற இன்பம் எப்படி இருக்கிறது என்றால், கோடையின் வறட்சிக் கொடுமை போக்க வந்த குளிர்நீர் தருகின்ற மகிழ்வு போல

'தெள்ளத் தெளிந்த நீர் போல்
செந்தமிழ்ப் பொருள் போய் நெஞ்சப்
பள்ளத்தில், கோடைத் துன்பம்
பறந்திடப் பாய்ச்சி விட்டான்'

தமிழைப்பற்றியே தனிப்பாடல்கள் பலவும் பாடியிருக்கிறார் கவிஞர். அவரது தமிழ்ப்பற்றை விளக்கும் மணிகள் அவை. 'தமிழ் இன்பத் தமிழ்,

எங்கள் உயிருக்கு நேர்' எனவும் 'தமிழ் எங்கள் கவிதைக்கு வயிரத்தின் வாள்' என்றும் சொல்லும் கவிஞர் தம்மையும் தமிழையும் இணைத்துக் கூறுகிறார், நயமாக. நிலாவும் வானமும் போல, பூவும் மணமும் போல, கிளியும் ஒளியும் போல, தமிழும் நானும் என்கிறார்.

**'வெண்ணிலாவும் வானும் போலே**
**வீரனும் கூர் வாளும் போலே**
**வண்ணப்பூவும் மணமும் போலே**
**மகர யாழும் இசையும் போலே**
**கண்ணும் ஒளியும் போலே எனது**
**கன்னல் தமிழும் நானும் அல்லவோ!'**

தமிழ், வலிமை மிக்க ஆயுதங்கள் குவிந்த படைவீடு. கவிஞரோ அவற்றை எவ்விதம் ஆட்சி செலுத்துவது என்பதை உணர்ந்த வீரத் தமிழன். தமிழ்தேன் துளும்பும் மலர் என்றால் கவிஞர் அதைச் சுவைக்கும் தும்பி. இவ்விதம் கூறும் துணிவு பாரதிதாசன் ஒருவருக்குத்தான் உண்டு.

**'தமிழ் கருமான்செய் படைவீடு**
**நான் அங்கோர் மறவன்!**
**கன்னற் பொருள் தரும் தமிழே நீ ஓர்**
**பூக்காடு; நானோர் தும்பி'**

இதைப் படித்தவுடன் 'வாழ்க மறவன்! வாழ்க மலர்க்காடு வாழ்க தும்பி!' என்று வாழ்த்துக்களை அள்ளிச் சொரிகிறது ரசிக உள்ளம்.

# புதுயுகக் கருத்து

மனிதர்கள் மனிதராக வாழவேண்டும்; கெட்ட போரிடும் உலகத்தை வேரோடு சாய்த்துப் புதியதோர் உலகம் செய்யவேண்டும் என்று அறிஞர்கள் ஆசை கொள்கிறார்கள். புதுயுகத்தை நிலை நாட்ட விரும்பும் சிந்தனையாளர்கள் இன்றைய மனிதரின் நிலைகெட்ட தன்மையை உணரும் போது சீறுவது இயல்பு. இன்றைய இழிநிலையைச் சுட்டிக் காட்டி, சொல்லாலே சுட விரும்புகிறவர்களில் கவி பாரதிதாசனும் ஒருவர்.

அவர் மனிதர் உள்ளப்பாங்கை ஆராயும் போது 'பலசரக்குக் கடை' பரப்பிவைத்தது போலிருப்பதையே காண்கிறார். கடுகுபோல் சிறிய உள்ளமும், அதற்கு அண்ணனான துவரை, அதற்கு அண்ணாத்தைகளான தொன்னைபோல், மாம்பிஞ்சு போல் தான் தோன்றுகின்றன. மக்கள் உள்ளங்கள் அகண்டதாய், விருப்பு வெறுப்பற்ற புனிதநிலையுற்று அன்புநிறைந்த தாயுள்ளம் போன்ற பெரிய உள்ளங்களைக் காணோம். இத்தகைய உள்ளநிலை எங்கும் உள்ளதானால் சண்டையே இல்லையே— 'தன்னலந் தீர்ந்ததாலே' என்கிறார்.

சரி, கடுகு போன்ற சிறுஉள்ளம் எது? தான், தனது, தன்னுடைய, தன்னால், தனக்கு, தன்னின், தன்னை என்று சகலமும் தானேயாகி வாழும் அப்பாவிதான் இந்த முதல் வகை.

'தன்பெண்டு தன்பிள்ளை சோறுவீடு
சம்பாத்யம் இவையுண்டு தானுண்டென்போன்
சின்னதொரு கடுகுபோல் உள்ளங்கொண்டோன்'

அவனை 'வீணன்' என்று வெறுத்து ஒதுக்குகிறார் கவிஞர். அதிலும் 'சிறிய வீணன்'—அற்பன் அவன்

'தெருவார்க்கும் பயனற்ற சிறியவீணன்'

'ஆகா எங்கள் ஊரைவிட்டால் வேறு ஏது' என்று கிணற்றுத் தவளை வேதாந்தம் பேசி தன்னூரிலேயே ஒடுங்கிக் கிடப்பவன் துவரைபோல் உள்ளம் பெற்றான். அதற்கு மேற்பட்ட தொன்னை உள்ளமும் உண்டு.

'கன்னலடா என்சிற்றூர் என்போனுள்ளம்
கடுகுக்கு நேர்மூத்த துவரையுள்ளம்!
தொன்னையுள்ளம் ஒன்றுண்டு; தனது நாட்டுச்
சுதந்தரத்தால் பிறநாட்டை துன்புறுத்தல்'

அப்படியானால் மாம்பிஞ்சு போன்ற உள்ளம் எது? ஆயுதங்களை ஒழித்து அமைதி காணக் கிளம்பி வாயடி கையடியில் இறங்குபவர்கள் தான். 'உலக மக்களெல்லாம் ஒன்றே என்னும் தூய உள்ளம், அன்புள்ளம்; பெரிய உள்ளம் இன்றிக் குறுகிய மனோபாவம் வளரப் போகவே, சுரண்டுவோர் சுரண்டப்படுவோர், உடையவர் இல்லாதவர், ஆளுவோர் அடிமைகள் என்ற பேதங்கள் பலத்தன.

இதற்கு 'விதி விதி' என்று சொல்லிக் கொண்டிருப்பதும் 'கடவுள்' என்ற கண்காணாத சந்

தேகத்துக்கிடமான ஏதோ ஒன்று இருந்து இப்படி யெல்லாம் ஆட்டி வைப்பதாகச் சொல்வதும் வாழ்க்கைக்கு வழிகாட்டா. இந்த அறியாமை களைக் கண்டு நவயுக எழுச்சியின் வீர முரசான புரட்சிக் கவிஞர் சொல்—அனல் சிதறினால் அது யார் தவறு? குள்ளநரிச் சமூகத்தின் தவறு. சிந்திக்கும் திறனிருந்தும் சிந்தனை செய்யாத மக்களின் குற்றம்.

நடவுசெய்த தோழர் கூலி
நாலணாவை ஏற்பதும்
உடலுழைப்பில்லாத செல்வர்
உலகை ஆண்டுலாவலும்
கடவுளாணை என்றுரைத்த
கயவர் கூட்டமீதிலே
கடவுள் என்ற கட்டறுத்துக்
தொழிலாளரை ஏவுவோம்!

அந்த நிலை ஏற்பட்டால் யார் சூழ்ச்சியும் எதிர்த்து நிற்க முடியாது. ஏன்? உழைப்பை நம்பி உழைப்பால் வாழ்பவர்கள் கூட்டம் கடல் போன்றது. சுரண்டுவோர் தொகையோ சிறிது. கடல் மேல் நீந்தும்தோணி அது. கடலின் கொந்தளிப்பு ஏற்பட்டால் ஓடம் சமாளித்து நிற்க முடியுமா? முடியாதுதானே!

ஊரிலேனும் நாட்டிலேனும்
உலகிலேனும் எண்ணினால்
நீர் நிறைந்த கடலையொக்கும்
நேர் உழைப்பவர் தொகை!
நீர் மிதந்த ஓடமொக்கும்
நிறைமுதல் கொளவோர் தொகை

குறை ஒன்று மோதுமாயின்
தோணி ஓட்டம் மேவுமோ?

இந்த உவமை மிகவும் தகுந்தது. அலை எறியும் விரிகடல் ஒருநாள் கொந்தளிக்கத்தான் செய்யும். அனல் தாங்கும் எரிமலை ஒருநாள் தீ உமிழத்தான் செய்யும், ஆனால் அதுவரை செல்வர் சதிராட்டம் கண்டு களிப்பார்கள்.

சதிராடுவது யார்? செல்வம்தான்! தரித்திரர்களை துடிக்கவிட்டுச் செல்வருடன் கொஞ்சம் தேவடியாளாகி விட்டது செல்வம்.

'அதிகரித்த தொகை தொகையாய்ச் செல்வமெல்லாம்
அடுக்கடுக்காய்ச் சிலரிடம்போய் ஏறிக்கொண்டு
சதிராடு தேவடியாள் போல் ஆடிற்று!
தரித்திரரோ புழுப்போலே துடிக்கின்றார்கள்'

உழைப்புக்கும் திறமைக்கும் தேவைக்கும் தக்கது போல பொருளாதாரம் அமையவில்லை. அட்டைகள் சிலர் உழைப்போருக்கு நாமம் தீட்டி தாம் கொழுத்தனர். இறைக்க இறைக்க நிறைய வேண்டியதற்குப் பதிலாக, ஏந்தியதை ஒழுக விட்டார் செயலற்றோர். குள்ளநரிச் செயலுடையார் அவ்வளவையும் தேக்கிவைக்கும் தொட்டிகள் ஆனார்கள்.

'கைத்திறனும் வாய்த்திறனும் கொண்டபேர்கள்
கண்மூடி மக்களது நிலத்தையெல்லாம்
கொத்திக்கொண் டேப்பமிட்டு வந்ததாலே
கூலிமக்கள் அதிகரித்தார்......

பொத்தல் இலைக் கலமானார் ஏழைமக்கள்
புனல்நிறைந்த தொட்டியைப்போல் ஆனார்
செல்வர்

பத்திரிகைகளைப்பற்றிய பாடலில் ஒரு உவமை உள்ளது. காடுமேடெல்லாம் அலைந்து இனிய பழம் சேர்ப்பவர்கள்போல் அறிஞர் நினைவுக் கனிகள் சேர்க்கிறார்கள். அவற்றை வாங்கி எல்லோருக்கும் கிடைக்கும்படி சந்தையில் விலை கூறுகிறது பத்திரிகை.

'கரும்புதர் விலக்கிச் சென்று
களாப்பழம் சேர்ப்பார் போலே
நெடும்புவி மக்கட் கான
நினைப்பினிற் சென்று நெஞ்சிற்
படும் பல நுணுக்கம் சேர்ப்பார்
படித்தவர்'

பொதுமக்கள் எதை விரும்புவார்கள், எத்தகைய சிந்தனைகள் பயனுள்ளவை என்றெல்லாம் ஓர்ந்து சிந்தித்துச் சிந்தித்து பல நயங்களைக் கண்டுபிடிக்கிறார்கள் படித்தவர்கள்.

'அவற்றையெல்லாம்
கொடும் என அள்ளி உன் தாள்
கொண்டார்க்குக் கொண்டுபோவாய்!'

இனிய உவமை இல்லையா இது?

# பாண்டியன் பரிசு

'எளிய நடை ஒன்றாலேயே தமிழன் மேன்மையை தமிழன் பயனை—தமிழர்க்கு ஆக்கமுடியும் என்பது எனது அசைக்கமுடியாத நம்பிக்கை' எனும் கொள்கையுடைய கவிஞர் பாரதிதாசன் 'தொடக்கப் படிப்பினரும்' புரிந்து கொள்ளும்படியாக இயற்றியது 'பாண்டியன் பரிசு' என்ற சிறு காவியம்.

அதில் உள்ள உவமை நயங்களை மட்டும் இங்கு கவனிக்கலாம்.

'நெடுங்கோட்டை மதிலின் மீது
கைக் காட்டி 'வா பகையே' என அழைக்கும்
புதுமைபோல் கொடி பறக்கும்'

கதிர் நாட்டுக்குள் பகைப்படை புகுந்தது. கடும் போர் எழுந்தது. 'பனைமரங்கள் இடிவீழக் கிழிந்து வீழும் பான்மைபோல் இருதிறத்தும் மறவர் வீழ்ந்தார்.' எதிரியின் படைகள் அரண்மனைக்குள் எங்கும் பரவ ஆரம்பித்தது. எப்படி? பொங்கிவரும் வெள்ளம் மடைதோறும் பாய்வதைப் போல் ஓடிச் சூழ்ந்தது.

'விரிநீர் போய் மடை தோறும் பாய்வதைப்போல்
சூழலுற்றார்; பொன்னிருப்புச் சாலைக்குள்ளும்
தொகுநெற் களஞ்சியத்தும் எவ்விடத்தும்!
இடுகாட்டில் நரிக்கூட்டம் உலாவல் போலே
எவ்விடத்தும் அரண்மனையில் வேழநாட்டின்
படைவீரர் உலாவினார். எலிகள் ஓடிப்

பண்டங்கள் உருட்டுதல்போல் பொருளையெல்லாம்
தடதடென உருட்டினார்.'

வீரர்கள் எதிரிமேல் பாய்கிறார்கள். ஆத்திரமாகச் சீறி ஆங்காரமாகப் பாய்கிறார்கள். நெய் ஊற்ற ஊற்ற வெகுண்டெழும் நெருப்பைப் போல. 'நெய்யாலே மூண்டெழுந்த நெருப்பைப் போலே, நெஞ்சாலே கொள்கின்ற விசையினோடு' பகைமேற் செல்வர்.

'எதிரெதிரே இரு தழற் பந்துகள் சுழன்றே
இருப்பதுபோல் கதிர் நாட்டான் வேழநாட்டான்
அதிர்கின்ற மெய்ப்பாடும் சுழற்றும் வாளும்
கட்புலனுக் கப்பாலாய் விசைகொள்ளும்'

பெற்றோர் கொலை செய்யப்பட்டனர் எதிர்த்து வந்த வஞ்சகனால் இளவரசி அன்னம் தாய்க்கிழவியின் உதவியால் தனியிடத்தில்பதுங்கி வாழ்கிறாள். அதை 'வல்லூறு குறிவைத்த புறாப் போல் வாழும் மலர்க்கொடியாள் அன்னம்' எனக் குறிக்கின்றார் கவிஞர்.

எல்லோரும் புரிந்துகொள்ளவேண்டும் என்ற எண்ணத்தால் எழுந்த இந்நூலில் சர்வசாதாரணமாக வாழ்வில் அடிபடும் உண்மைகள் உவமைகளாகக் கையாளப்பட்டுள்ளன. அவை புதுமையாய் ஒலிக்கின்றன.

தாயின் நினைப்பு. தனது அருமை மகள் ஒத்த நலன்களுடைய காதலனுடன் இன்பம் துய்க்கவேண்டும். அக்காட்சி அவன் மனக்கண்ணில் படர்கிறது. அன்பு மகளும் அவளது அன்ப

னும் ஆணிப்பொன் கட்டிலிலே இன்பத்தில், தம்மை மறந்த சுகத்திலே, ஆழ்ந்து கிடக்கிறார்கள் எவ்விதம்? சேற்றிலே எருமை கிடக்குமே, தன்னை மறந்து, சூழ்நிலை மறந்து, இன்பக் களிப்பிலே சொக்கிப்போய்—அதைப் போல!

'அருமை மகள் தனக்கேற்ற அன்பனோடும்
ஆணிப் பொன் கட்டில் எனும் சேற்றினுள்ளே
எருமை எனக் கிடந்தின்பம் நுகர்'

பன்றிக் குட்டிகள் தாய்ப்பால் அருந்தும் பான்மை ஒற்றுமையின் எடுத்துக் காட்டு. எல்லாம் கூடிச்சண்டை சச்சரவு இல்லாமல் தாயிடம் பால் அருந்தி உல்லாசமாக உலவும். இவ்விதம் மக்களும் நிறையன்பால் ஒற்றுமையாய் வாழலாம் அல்லவா? உலக ஒற்றுமைக்கு உவமையாக இச் சித்திரம் ஆளப்படுகிறது.

'சுரந்தபால் இருந்தருந்திப் பரந்துலாவும்
நெடும்பன்றிக் குட்டிகள்போல் மக்கள் யாவரும்
நிறையன்பால் உடன்பிறந்தார் என்றுணர்த்தக்
கிடந்துதவும் புரிகின்ற உலகு'

தன்னுணர்வற்றுப் போய் மயங்கிக் கிடக்கும் துன்பநிலையை 'இரண்டுள்ளம் சுரப்பற்ற பசுக் காம்பைப்போல் எந் நினைவும் இல்லாமல் துன்பமே' எனக் கூறுவது நன்றாயிருக்கிறது.

பயந்தோடும் மனிதர்கள் வேகமாக ஓடுகிறார்கள். நாலாபுறமும் பயமுறுத்தும் பூதம் தொடர்வதாகப் பிரமை கொண்டு திரிகிறார்கள். எங்கே போவது என்று தெரியவில்லை. 'அங்கே பூதம், இங்கே பூதம்' என்று விழுந்தடித்து ஓடி.

ஓடிய இடத்துக்கே மீண்டும் போய், சுற்றிச் சுற்றி ஓடுகிறார்கள், கவலை எருதுகள் போல!

'கவணோடும் கல்லைப்போல் விரைந் தாரேனும்
எவ்விடத்தில் யோவதென்று கருதவில்லை
கவலை எருதுகள் போல் மக்கள் யாரும்
கால்கடுக்க நகர் சுற்றிச் சுற்றி வந்தார்'

போர் செய்தல் வீரத்தமிழன் பண்பு. நேர்மையான முறையில் போரிடுவதை அவன் வெறுப்பதில்லை. தேனை வண்டு வெறுக்காது. தண்ணீரை மீன் வெறுப்பதில்லை. அதுபோல்தான்.

தேன் வெறுக்கும் வண்டுண்டோ நல் அறப்போர்ச்
செயல் வெறுக்கும் தமிழருண்டோ? தெண்ணீர்
தன்னை
மீன் வெறுத்ததுண்டோ?

ஒருத்தி தனது கணவனின் குணம் பிடிக்காது வெறுத்து ஒதுக்கிவிட்டாள். பல ஆண்டுகளாகி விட்டன. இருவரும் முதியோராயினர், மன உறுதி தளரவில்லை. ஆகவே இடைக்காலத்தில் ஒருவரை ஒருவர் காணவில்லை. முடிவில் இருவரும் இனம் தெரியா மாற்றுருவில் போரிட்டுக் காயம் ஏற்று வீழ்ந்துகிடந்தனர். நோவைப் பொறாத அவள் அவ்வேதனையிடையேயும் உச்சரித்தது 'அத்தான்' என்ற இனிய சொல்லைத்தான். இது இயல்புதானே. காயம் படும் பிள்ளை சோகமாய் கதறும்போது முதலில் 'அம்மா' என்றுதானே கூவுகிறது, அன்பின் உருவை எண்ணி, அது போல்தான் அவள் செயலும்.

'தனக்குந்தன் கணவனுக்கும் இடையில் வாய்ந்த
தடை, பிரிவு கசப்பனைத்தும் பல்லாண்டாகப்

புனத்திலுறும் புதல்போலே வளர்ந்ததாலே
புறத்தொடர்பே இல்லாத முதிய ஆத்தா,
அனற்கொள்ளி பட்ட பிள்ளை கதறும் போதில்
அம்மா என்பது போலே துணைவன் தன்னை
நினைத்தவளாய்த் தாழ்குரலில் 'அத்தான்'
என்றாள்

வானம் இருண்டது. மின்னல் பளிச்சிட்டது, இடி அதிர்ந்தது. பின் மழை. வானம் கண்ணீர் சொட்டும் காட்சிக்கு அழகான உவமைகள் கூறும் கவியின் திறம் போற்றுதற்குரியது. கல்வி யறிவு அற்றவனின் உள்ளம் போல இருள்கிறது.

வழக்காடிப் பொருளை எல்லாம் இழந்துவிடு வது உண்மை. அப்படி வழக்குகளில் ஈடுபட்டு வறியனாகிறவன் செல்வம் மின்னல் ஒளிர்ந்து மாய்வதற்கு உவமை. பொருள் இழந்தவன் அலறுவது போல இடி உறுமுகிறது.

'கேள்வி இலார் நெஞ்சம் போல் இருண்டு, நீளும்
வழக்குடையார் செல்வம் போல் மின்னி மாய்ந்து
வண்பொருளை இழந்தான் போல் அதிர்ந்து
பின்னர்
மழைக்கண்ணீர் உகுத்தது வான்?'

படித்து அனுபவிக்க வேண்டிய பகுதி.

காற்று பாய்ந்து சிறு படகில் மோதுவதை

'பழக்குலை மேல்எறிந்த குறுந்தடியே போல்
பாய்ந்த தொருபெருங் காற்று படகு நோக்கி'

என்று ரசமாகச் சொல்கிறார் கவி. பாராட்ட வேண்டிய உவமை. அதே போன்றதுதான் வேப்பிலைகளுக்கு அவர் காட்டும் உவமை.

'தேனெடுத்து வைத்ததெனை இருக்கும்'

பேழை காணாமற் போயிற்று. அதை யாரோ பதுக்கி விட்டார்கள். ஏமாற்றிக்கொண்டு போய், எங்கே என்று தெரியாமல் மறைத்து விட்டனர். அது எதைப் போலிருக்கிறது என்றாலோ, கொஞ்சம் தீனிபோட்டு ஆசை காட்டிக் கோழியை அமுக்கிவிடுவது போலவாம். அதை தேடினால் கிடைத்து விடுமா! பதுக்கியவர்கள் சொன்னால் தான் தெரியும்.

'தீனியிட்டுக் கோழியினை மடக்குவார் போல்
மூடிவிட்டார் பேழையினை? அவர்கள் கொஞ்சம்
மூச்சு விட்டால் தானே நாம் அறிதல் கூடும்?'

குள்ளநரிச் செயலுடையான் 'நரிக்கண்ணன்' நாட்டின் தலைவன் ஆகிவிட்டான். அவனுக்கு ஒரு மந்திரி. அவன் மைந்தன். தந்தை நல்லவன், கொடியவனை அடுத்துக்கெடுத்தலே அவன் கொள்கை என்று விளக்குகிறான். தந்தை மந்திரி என்பதற்காகக் கொடியவனைப் போற்ற முடியுமா, அவனைக் கண்டு அஞ்சுகிறேன் என்னும் மைந்தன் கேட்கிறான். விலங்கு பழக்குகிறவன் வளர்க்கும் வெள்ளாடுதான். அவன் பழக்கும் வேங்கைதான். என்றாலும் அந்த வேங்கை முன் வெள்ளாடு மகிழ்வுடன் துள்ளி நெருங்கவா செய்யும்!

'விலங்கு பழக்கிடுவானின் வெள்ளாடொன்று
வேங்கையிடம் நெருங்கையிலே மகிழ்வதுண்டோ?

தந்தை வேலை பார்க்கும் இடம் என்பதற்காக, கொடியவனின் செயலை ஒப்பமுடியுமா? அவன் எனக்கு வேப்பங்காயே என்கிற மகன் சொல்கிறான். தமிழன்தான் அவன். தெலுங்குப்

பாட்டுப் பாடுகிறான் நம்மவன்தானே தெலுங்கிசை பாடுகிறான் என்று இன்புறுகிறார்களா தமிழர்?

'தெலுங்கினிலே பாடிடுமோர் தமிழன் செய்கை
தேனென்றா நினைக்கின்றார் தமிழகத்தார்?'

அதுபோல்தான் அவனையும் இவர்கள் வெறுக்கிறார்களாம்—தந்தையும், மகனும்.

இயற்கை வர்ணனை ஒன்று. மேல வானிலே செங்கதிர் மறையும் கோலம். அத்திசை பொன்னாறு. மிதக்கும் ஞாயிறு செவ்விய மாணிக்க ஓடம். ஒளியின் வீச்சு அற்புதக் காட்சி.

'பாரடி நீ மேற்றிசை வானத்தை: அங்கு
தேங்கி நிற்கும் பொன்னாற்றில் செழுமாணிக்கச்
செம்பருதிப் படகோடும்; கீழ்த் திசை வான்
வாங்கி நிற்கும் ஒளியைப் பார் காட்சித்தேனில்
வண்டடி நாம்!'

நதிப்புனலில் படகில் செல்லும் தலைவி தோழியிடம் கூறுகிறாள் இப்படி, இனிய வர்ணனை.

கவிஞர் பாரதிதாசன் கவிதைகளில் இனிமைக்கும் அழகுக்கும் புதுமைக்கும் குறைவே கிடையாது. எல்லாம் இன்பப் பெருக்கு. தமிழ்த் தேன் சுவை அவரது கவிதை தருவது. அவரது கவிதைகளை ருசிக்கும்போது நாமும் மது மாந்தும் வண்டுகள் ஆடுவிடுகிறோம். இன்பம்! மகிழ்வு! இத்தகைய விருந்தளிக்கும் கவிஞரை வாழ்த்துகிறேன். போற்றுகிறேன்.

புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் வாழ்க!

○ ○ ○

